



பவன் க்ரந்த பீடம்



# கடோபநிஷத்து

சக்கரவர்த்தி
ராஜகோபாலாச்சாரியார்

சம்பாதகர்கள்
கே. எம். முன்ஷி
ஆர். ஆர். திவாகர்





பாரதீய வித்யா பவன், பம்பாய்.



# பாரதீய வித்யா

# அதன் தன்மையும் நோக்கமும்

பாரத நாட்டின் பேரிலும், பாரதத்தின் சிறந்த கலாசாரத்தின் கருவூலமான பாரதீய வித்யா(பாரதத்தின் கல்வி அறிவு மீதும் நம்பிக்கையும் பற்றுதலும் கொண்டுள்ள, மேன்மையான எதிர்காலத்தை உடைய, குணசீலனான இந்திய இளைஞன், பணமின்மை என்ற ஒரே காரணத்திற்காக அவனுக்குத் தேவையான கல்வி வசதிகளைப் பெறமுடியாத நிலையில் இருப்பதைத் தவிர்க்க, பாரதீய சிக்ஷா (பாரதத்தின் கல்விப் பயிற்சி) உதவ முடியும் என்பதை உறுதிப்படுத்த வேண்டும்.

2. பாரதீய சிக்ஷை வெறும் செய்திகளையே போதிப்பதாக இல்லாமல், நல்ல சிந்தனை வளத்தை ஊட்டுவதாக இருக்க வேண்டும். மேலும், நூலறிவு மட்டுமே அதன் லட்சிய எல்லையாக இருக்கலாகாது; இயல்பாக அமைந்துள்ள திறமைகளை ஊக்குவித்து வளர வைப்பது மட்டும் அதன் குறிக்கோளாக அமையக்கூடாது. பாரதீய வித்யா தன்னுடைய நிரந்தரமான சிறப்புகளை யெல்லாம் மாணவர்கள் ஏற்று, வெளிப்படுத்திப் பயனடையும் வகையில் அவர்களை உருவாக்க வேண்டும்.

3. அது ஒரு மாணவனின் தனிப்பட்ட பூர்ண வளர்ச்சியைமட்டும் அளித்தால் போதாது. அவன் தொடர்புகொண்ட எல்லா முறைகளையும் கருத்தில் கொண்டு, அவனது அறிவாற்றலுக்கு ஏற்றபடி, சீரிய அகநிறைவைப் பெற அவனுக்கு அது வழிகாட்ட வேண்டு

4. பாரதீய சிக்ஷையில், ஒரு குறிப்பிட்ட நிலையில், சம்ஸ்கிருதம் அல்லது அதைச் சார்ந்த மொழிகளையும், அவற்றின் இலக்கியங்களையும் நன்கு பயில வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட வேண்டும். ஆர்வம் இருந்தால், மற்ற பழைய-புதிய மொழிகளையும் இலக்கியங்களையும் கற்றுக்கொள்ள முற்படுவதைத் தடுக்கக் கூடாது.

5. பாரதக் கல்வி போதனையின் முதன்மையான குறிக்கோள் கல்வித் துறைகளுள் ஒருமைப்பாட்டை உருவாக்கி, நிலைநிறுத்துவதுதான். பலதரப்பட்ட சக்திகள், இயக்கங்கள், கொள்கைகள், நோக்கங்கள், அமைப்புகள், வாழ்வுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்கும் ஆயகலைகள் - இவைகளை முறைப்படிப் பயின்று தேர்ச்சி பெறுவதன் மூலமே அக் குறிக்கோளை எட்ட முடியும். மேலும். பல்வேறு காலங்களிலும் அந்த ஒருமைப்பாடு உள்ளிழையாகத் தொடர்ந்து இருப்பதையும் அறிய முடியும்.

6. அறமும் அறிவும் வளர்த்த பேராசிரியர்களின் உயரிய இலட்சியங்களின் அடிப்படையில் பயிற்சி பெறும் ஒவ்வொரு மாணவரும், எந்த நிலையிலும் எழுத்தாலும் பேச்சாலும் தன் கருத்துக்களை வெளிப்படுத்தும் ஆற்றலை ஊக்குவிக்கும் முறையில் பாரதீயக் கல்விப் பயிற்சி இருக்கவேண்டும்.



7. பாரதீய சிக்ஷையின் அமைப்பு பின்கண்ட அம்சங்களைக் கொண்டதாக இருக்க வேண்டும் :

(அ) மாணவருக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிப்பதோடல்லாமல், ஏற்றுக் கொண்ட கல்வித்துறையில் தேர்ச்சியையும் அளித்தல்; அவருடைய அன்ருட வாழ்க்கையோடு தொடர்பு கொண்டு, மாறுபட்ட மனோநிலைகளில் அவருக்கு உண்டாகும் இடையூறுகளை விலக்கி உயரிய லட்சியங்களைக் கொள்ள வழி புரிதல்; மாணவர் உள்ளத்தில் தியாக புத்தியை ஏற்படுத்துதல்—ஆகிய குருதேவருக்கு உரிய இந்த இலட்சணங்களைக் கைக்கொண்டு ஆசிரியர் மாணவரிடம் நேரிடையான தொடர்பும் கவனமும் செலுத்தவேண்டும்.

(ஆ) ஆசிரியருக்கு மதிப்பு தருவது; அவருடன் மரியாதையாகப் பழகுவது; கல்வி கேள்விகளில் குன்ருத ஆர்வம்; கல்வி, கல்விச்சாலை, ஆசிரியர், பாரதநாடு, பாரதப்பண்பு ஆகியவைகளிடம் ஆதரவு கொள்வது; பணிபுரியும் தொண்டு மனப்பான்மை முதலான சிறந்த சீடனுக்கு உரிய இந்தத் தன்மைகளை ஒவ்வொரு மாணவரும் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

8. ஸ்ரீ ராமர், ஸ்ரீ கிருஷ்ணர், வியாசர், புத்தர், மகாவீரர் ஆகிய மகான்கள் வெளியிட்டுள்ள பொன்மொழிகள், அவைகளுக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ள ராமகிருஷ்ணர், தயானந்தர், விவேகானந்தர், அரவிந்தர், காந்தி அடிகள் ஆகியவர்களுடைய வாழ்க்கை நெறிகள், உண்மைக் கருத்துக்கள் முதலியவற்றை அறிந்து, அவைகளுக்கு ஏற்ப இளைஞர்கள் வாழ வழிகாட்டுவதே பாரதக் கல்வியின் சிறந்த குறிக்கோள்.

9. நவீன விஞ்ஞான - தொழிற்கல்விகளில் தேர்ச்சி அளிப்பதுடன், புராதனமான அமைப்பு, கருத்து, பரம்பரை - இவைகளைப் புறக்கணிப்பதைத் தடுக்கவும் நம் கல்வி போதனை வழிகாட்ட வேண்டும். காலப்போக்கிற்கு ஏற்ப சீரிய அமைப்பு, கருத்து முதலியவற்றைப் புதியவை என்பதற்காக ஒதுக்காமல், வரவேற்கும் தன்மையையும் அது ஏற்படுத்த வேண்டும். மேலும், பாரதீய சிக்ஷை ஒவ்வொரு தலைமுறையும் பாரதக் கல்வியின் இலட்சியங்களை நன்கு அறிந்து, கடைப்பிடித்து உலகுக்கு எடுத்துக்காட்டும் அளவுக்குப் பயிற்சியும் பயிலுவிக்கும் தகுதியும் பெற வாய்ப்பு அளிக்க வேண்டும்.



आ नो भद्राः क्रतवो यन्तु विश्वतः।

நல்ல கருத்துக்கள் நமக்கு
எல்லாத் திசைகளிலிருந்தும் வரட்டும்.

ருக்வேதம். 1-89-i

---

# பவன்

## க்ரந்த பீடம்




சம்பாதகர்கள் :

கே. எம். முன்ஷி

ஆர். ஆர். திவாகர்




1

# கடோபநிஷத்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்
எழுதியது

# பாரதீய வித்யா பவன்

## க்ரந்த பீடம்



22-5

பவன் க்ரந்த பீடம்

# கடோபநிஷத்து

பொருள் விளக்கம்



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

எழுதியது




பாரதீய வித்யா பவன்
(சென்னைக் கிளை)
83, கோபதி நாராயணஸ்வாமி ரோட்
தியாகராயநகர் :: சென்னை-17
1962

## சம்பாதகர் முன்னுரை

பாரதீய வித்யாபவனம், பாரத நாட்டின் பண்பாட்டுச் சிறப்பைப் பரப்பவே அமைந்த ஒரு கலாசார ஸ்தாபனம்; அதன் தலைமைக் காரியாலயம் பம்பாய் மாநகரில் அமைந்திருக்கிறது. இதன் பணிவகைகளில் உயர்தரக் கல்வியறிவைப் புகட்டும் சிறந்த புத்தகங்களை வெளியிடுவதற்கென நிறுவப்பட்ட க்ரந்த வித்யாபீடம் ஒன்று.

முக்கியமாக, பாரத தேசத்தின் அடிப்படைக் கொள்கைகளையும், சக்திகளையும் பிரசாரம் செய்யத்தக்க இலக்கியங்களை வெளியிட வேண்டுமென்பதே பவனத்தின் நோக்கம். முதலில், உடனடியாக அத்தகைய நூறு புத்தகங்களை ஆங்கிலத்தில் வெளியிட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. ஒவ்வொரு நூலும் 200-250 பக்கங்கள் கொண்டதாக இருக்க வேண்டுமென்றும், விலை இரண்டே ரூபாயாக இருக்க வேண்டும் என்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

தேர்ந்தெடுத்துள்ள நூல்களை ஆங்கிலத்தில் மட்டும் பிரசுரிக்க வேண்டுமென்பது எங்களது நோக்கமல்ல; இந்தி, வங்காளி, குஜராத்தி, மராட்டி, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய இந்திய மொழிகளிலும் அவைகளை வெளியிட திட்டமிட்டிருக்கிறோம். இத்திட்டப்படி 900 புத்தகங்கள் பிரசுரிக்கப்படும். அகில இந்திய ஸ்தாபன ரீதியாக செயல்பட வேண்டியிருப்பதால், இதற்கு நிறைய நிதி வசதி தேவைப்படுகிறது. பவனம் இப்பெரு முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளது.

பவனத்தின் பணித் திட்டத்திற்கு அடிப்படையான குறிக்கோள், நமது புராதனமான பாரதப் பண்பாடு புதுமை உலகத்தின் நவீன விஞ்ஞான அறிவுடன் இணைக்கப்பட்டு புது மெருகு பெற வேண்டுமென்பது. மேலும், நமது கலாசாரம் தற்காலத்திய வாழ்க்கைத் தேவைக்கு உகந்ததாய் அமைவதோடு அல்லாமல், அதன் அடிப்படைச் சிறப்புகளும்,

அவற்றின் பழமையான சக்திகளும் குன்றாமல் புத்துயிருடன் மிளிரவேண்டும்.

எங்களுடைய லட்சியத்தை மேலும் தெளிவாக்க விரும்புகிறோம்.

நாங்கள் மனிதனின் மேம்பட்ட தன்மதிப்பை நிலை நிறுத்த விரும்புகிறோம். இத்தகைய தன்மதிப்பு வளர, அதற்கு ஒவ்வொரு மனிதனுடைய மனோபாவங்களுக்கும் திறமைகளுக்கும் ஏற்ற சமூகச் சூழ்நிலைகளை உருவாக்க வேண்டியது அவசியம். தனிமனிதனின் செயலாற்றல்களையும் சமுதாய உறவுகளையும் இணைத்து அந்த ஒற்றுமையின் தரத்தை வளர்ப்பதும் எங்கள் இலட்சியம். அந்த இணைப்பு வெறும் தற்காலிகச் செயலாக இருக்கக்கூடாது. அது நன்னெறியின் கண் காணிப்பில் அமைய வேண்டும்.

குறிப்பாக, மனித முயற்சிகளாலேயே மனித வாழ்க்கையை படிப்படியாக உயர்ந்த நிலைகளுக்கு முன்னேற அமைத்துக்கொள்ள வேண்டும். இதன்மூலம் கடவுளை உலகப் பொருட்களனைத்திலும், உலகமனைத்தையும் கடவுளிலும் பார்க்கும் ஞானம் படைத்து, தன்னை, கடவுளின் சிறு கருவியாகக் கருதி வாழும்படி ஒவ்வொரு மனிதனையும் ஆக்க விரும்புகிறோம்.

நாம் நம்மை மறந்து உலகப்பற்றுகளில் மூழ்கிக் கிடக்கிறோம். நல்ல நூல்களிலுள்ள கருத்தழகும் ஊக்க மூட்டும் தன்மையும்தான் நம்மை முன்னேறச் செய்யும்.

இதற்காக இந்திய இலக்கியச் செல்வங்களை—பழையன, புதியன இரண்டையும்—குறைந்த விலையில் வெளியிட்டு வருகிறோம். மேற்கூறிய இலட்சியங்களுடன் இயைந்த பிறநாட்டு இலக்கிய நூல்களும் இதன் மூலம் வெளியிடுவோம்.

பல மொழிகளின் மூலம் வெளிவந்துள்ள பிறநாட்டுச் சிந்தனையாளர்களின் அபிப்பிராயங்களும் பாரத தேசத்து அறிஞர்களின் கருத்தோவியங்களும் ஆர்வத்தையும் அவாவையும் அடிப்படையாகக் கொண்டுவந்திருப்பதைக் காண்கிறோம். இப் புத்தகங்களைப் படிப்போர் இதை அறிந்து அனுபவிக்க முடியும்.

22-5

நம் நாட்டு ஆத்மீய இலக்கியங்களில் தலைசிறந்தவை உபநிஷத்துகள். மற்ற இதிஹாஸங்கள், புராணங்கள், காவியங்கள், நாடகங்கள் எல்லாம் உபநிஷத்துகளில் கூறப்பட்ட உண்மைகளின் விளக்கங்களாய் அமைந்துள்ளன. இவ்வுபநிஷத்துக்களுள் முக்கியமானது "கடோபநிஷத்" என்பது. அதில் நசிகேதஸ் என்ற சிறுவன் எமனையணுகி, இறந்தபின் மனிதன் என்னவாகிறான் என்று கேட்டு விளக்கம் பெறுகிறான்.

பவன் க்ரந்த பீடம் தமிழ் மக்களுக்கு அளிக்கும் முதற் புத்தகம் உபநிஷத்துக்களில் சிறப்பு வாய்ந்த "கடோபநிஷத்"தாக அமைந்தது சாலப் பொருந்தும். அதுவும், நம் ராஜாஜி அவர்கள் இதை அவருக்கே உரித்தான தெள்ளிய தமிழில் விளக்குவதை வாசகர்கள் களிப்புடன் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறோம்.

இத்தகைய புத்தகங்கள் மூலமாகத்தான், உண்மையான கலாசாரத்தின் பொது உணர்வைப் பரப்ப முடியும். என்றாவது ஒரு நாள் இன்றைய வாழ்வு முறையில் நிரம்பியுள்ள ஒழுங்கீனங்களையும் வேற்றுமைகளையும் போக்கி, ஒற்றுமையை நிலைநாட்ட முடியும் என்றே நான் நினைக்கிறேன்.

பவனத்தின் பணித் திட்டங்களில் ஒன்றான இப்புதிய துறையைத் திறன்படச் செயலாற்றவும் சிறப்பிக்கவும் துணை நிற்கும் எல்லா அன்பர்களுக்கும் என் நன்றி.

கே. எம். முன்ஷி
(சம்பாதகர்.)

# பதிப்புரை

பாரதீய வித்யா பவன் க்ரந்த பீடம் புஸ்தகங்கள் வெளியிடும் இச்சந்தர்ப்பத்தில், சென்னைக் கிளை ஸ்தாபனத்தின் முதல் நூலாக ராஜாஜி அவர்கள் எழுதிய "கடோபநிஷத்து" என்ற நூலை வெளியிடுவதில் பெருமை அடைகிறோம். இந் நூலை வெளியிட உரிமை தந்த ராஜாஜி அவர்கட்கும், புத்தகம் அச்சாகும் சமயத்தில் உடன் இருந்து பிழைகளைத் திருத்திக் கொடுத்த ஸ்ரீ என். சுப்பிரமணிய அய்யர் (அண்ணா) அவர்கட்கும் எங்கள் நன்றி.

—பதிப்பாளர்.

# முன்னுரை

இந்த நூல் பல ஆண்டுகளுக்கு முன் நான் எழுதியது. சென்னை ராக்ஹவுஸார் பிரசுரித்தார்கள். பாரதி வித்யா பவனத்தார் இதை மறு பதிப்பாக வெளியிட முன் வந்தார்கள். மகிழ்ச்சியுடன் புத்தகத்தை முற்றிலும் படித்துச் சுத்தப்படுத்தித் தந்தேன்.

விஷயம் மிக முக்கியமானது. பாரதநாட்டு ரிஷிகள் கண்ட வேதாந்தம் என்ன வென்பதை நாம் அனைவரும் அறிய வேண்டும்.

இந்நூல் அதற்கு உதவும்.

சென்னை }
22-5-61 }

இராஜகோபாலாச்சாரி.

## முதல் பதிப்புக்கு எழுதிய முன்னுரை

மெய்ப்பொருள்பற்றி பாரத தேசத்து ரிஷிகள் ஆராய்ச்சி செய்த வண்ணம் வேறு எந்த தேசத்து அறிஞர்களும் செய்தது கிடையாது. இந்த ஆராய்ச்சி யின் பயனே 'வேதாந்தம்'. இது ஹிந்து மதத்தின் உயிர்ச்சத்து. மானிட ஜாதி முழுமைக்கும் பயன்பட வேண்டுமென்று ஆராய்ந்து கண்டதுதான்; ஆனாலும் தற்காலத்தில் சிறப்பாக ஹிந்து மதத்தின் முக்கிய தத்துவமாகப் புகழ்பெற்று நிற்கிறது. வேதாந்த நூல்களில் சிறந்தது உபநிஷத்து. உபநிஷத்துகளைப் படித்தால், குற்றம் குறை நீங்கிய பூரண ஞானம் கிட்டாவிட்டாலும், தாமசகுணம் குறைந்து, சாத்து வீக குணம் ஓரளவு அடையலாம்.

உபநிஷத்துகளில் முக்கியமானவை பத்து. அந்தப் பத்தில் கடோபநிஷத்து ஒன்று.

அரசியல் நிருவாகத்திலிருந்து விடுபட்டதும் இந்தக் கடோபநிஷத்தை எளிய நடையில் மொழி பெயர்த்து, பொருள் விளக்கமும் எழுதி, வடமொழிப் பயிற்சி யில்லாதவர்களுக்கு உதவும்படி செய்ய வேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. எழுத உட்கார்ந்ததும், சாஸ்திரங்களைச் சரிவரப் படியாம லும், உள்ளத்தில் பக்குவம் அடையப் பெறுமலுமுள்ள நான் இதைச் செய்யத் துணிந்தது பெருந்தவறு என்று தெரிந்து கொண்டேன். என் தகுதிக்கு மிஞ்சிய காரியம் என்பது நன்கு புலப்பட்டது. ஆயினும் உள் ளத்தில் பொங்கிய ஆசையின் காரணமாகவே ஒருவித மாகச் செய்து முடித்தேன். பிழைகளைப் பொறுத்து,

என் நன்னோக்கத்தையே பொருட்படுத்திப் பெரியோர்கள் ஆசீர்வதிப்பார்களாக.

இந்நூலை மயிலாப்பூர் ஸ்ரீ பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் பார்த்து ஓரளவு திருத்தித் தந்தார்கள். அதற்காக அவர்களுக்கு என் நன்றி செலுத்துகிறேன்.

ரா.

# கடோபநிஷத்து

இந்த உபநிஷத்து ஆறு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு, 120 சுலோகங்கள் அடங்கியுள்ளது.

அருச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்ததாக பகவத் கீதை எழுதியிருப்பது போல், இந்த உப நிஷத்தை ஆக்கிய ரிஷி நசிகேதன் எமனிடம் சென்று உபதேசம் பெற்றதாக நூலுக்குத் தோற்றுவாய் அமைத்திருக்கிறுர். போர்த்துவக்கத்தில் அர்ஜுன னுக்கு உண்டான மனத்தயக்கம் தீர்வதற்காகக் கண்ணன் உபதேசம் செய்தது போலவே, நசிகேதன் உபதேசம் அடைந்த வரலாறும் உள்ளத்தைக் கவரும் படியான ஒரு கதை.

முன்ஒெரு காலத்தில் வாஜசிரவஸர் என்ற வேதி யர் பெரிய யாகம் ஒன்று நடத்திஞர். அந்த வேள்விக் கிரமத்தை அனுசரித்துத் தன் சொத்துக்கள் அனைத் தையும் தக்ஷிணையாகக் கொடுத்தார். இதைப் பார்த் துக்கொண்டிருந்த அவருடைய மகன் நசிகேதன் யோசிக்கலாஞன். "என் தகப்பஞர் கிழட்டு மாடு களைத் தானமாகக் கொடுத்துப் பெரும் பலன்கள் அடையப் பார்க்கிறுர். இது வீணல்லவா?" என்று தனக்குள் நினைத்து, "அப்பா! என்னை யாருக்குத் தக்ஷிணையாகக் கொடுக்கப் போகிறீர்?" என்று தகப்ப ஞரைக் கேட்டான். அவர் முதலில் பதில் சொல்ல வில்லை. மீண்டும் மீண்டும் கேட்டான்: "நீ எமனுக்கு தக்ஷிணை" என்று தகப்பஞர் கோபமாகவோ வேடிக் கையாகவோ சொன்ஞர். வேதத்தைப் பின்பற்று பவர்கள் ஏதேனும் சொல்லிவிட்டால் அதைப் பூர்த்தி செய்தே தீர வேண்டும்.

நசிகேதன் எமலோகத்திற்குச் சென்று, அங்கு எமன் வீட்டு வாயிலில் மூன்று நாள் காத்திருந்து, பிறகு எமனைக் கண்டு, அவனோடு வாதாடி, அவனுடைய நன்மதிப்பையும் சிறந்த உபதேசத்தையும் பெற்ருன்.

இந்த உப்தேசத்தில் வேதாந்தத்தின் முக்கிய தத்துவங்கள் அடங்கி நிற்கின்றன. இந் நூல் ஹிந்து தர்மத்தை அறிந்து அவ்வழியில் நிற்கப் பிரியப்படும் ஒவ்வொருவரும் படிக்கவேண்டிய நூல். பகவத்கீதையைப்பற்றிக் "கண்ணன் காட்டிய வழி" யில் நான் சொன்னவாறே இந்நூலைப் படிக்கும் போதும் தோற்றுவாய்க் கதைக்கு ஒவ்வொரு விஷயத்தையும் சம்பந்தப்படுத்திக் கலவரப்படுத்திக் கொள்ளாமல் உபதேசத்தையே கவனித்துக்கொண்டு போக வேண்டும்.

## கடவுள் வணக்கம்

அறியாமையாலோ, அல்லது வேறு காரணத்தாலோ ஏற்படக்கூடிய குற்றங் குறைகளால் யாதொரு தீமையும் உண்டாகாதிருக்கவும், உபதேசமானது நல்ல பயன் பெறும் படியாகவும், குருவும் சீடனும் சேர்ந்து செய்யும் கடவுள் வணக்கம் :

ஓம் : ஈசன் நம்மைக் காப்பாற்றுவானாக. மெய்யறிவை நமக்கு ஊட்டிக் காப்பாற்றுவானாக. எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியில் நன்கு கவனம் செலுத்துவோமாக. நாம் ஆராய்ந்து அடையும் அறிவு ஒளி பெற்று விளங்க வேண்டும். நம் உள்ளத்தில் பகையும் வெறுப்பும் ஒழிய வேண்டும் : அமைதி வளர வேண்டும்.

ओं सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै ।
तेजस्विनावधीतमस्तु । मा विद्विषावहै ।
ओं शान्तिः । शान्तिः । शान्तिः ॥

முதல் அத்தியாயம்

# ஆத்ம ஞானமே பரமானந்தத்தைத் தரும்

1

பண்டைக் காலத்தில் வாஜசிரவஸர் நல்ல பேறுகள் பெற விரும்பி ஒரு யாகம் செய்தார். தன்னிடமிருந்த பொருள்கள் அனைத்தையும் அந்த வேள்வியின் முறைப்படி தானம் செய்தார். அவருக்கு நசிகேதன் என்னும் ஒரு மகன் இருந்தான்.

ओं उशन् ह वै वाजश्रवसः सर्ववेदसं ददौ ।
तस्य ह नचिकेता नाम पुत्र आस ॥ १ ॥

2

தக்ஷிணையாகக் கொடுப்பதற்குக் கொண்டுவரப்பட்ட பசுக்களைப் பார்த்து, அந்த வாலிபன் பக்தியுடன் தனக்குள் சிந்திக்கலானான்.

तं ह कुमारं सन्तं दक्षिणासु नीयमानासु श्रद्धाविवेश
सोऽमन्यत ॥ २ ॥

3

இந்தக் கிழட்டுப் பசுக்களைத் தகப்பனார் தக்ஷிணையாகக் கொடுக்கிறார். தண்ணீர் குடித்து, புல் தின்று, கன்று போட்டு, பால் தரும் காலம் எல்லாம் கடந்து போன இந்தப் பசுக்களைத் தானம் செய்வதினால் என்ன பதம் கிடைக்கும்? இன்பம் அற்ற மறு பிறப்புகள் தான் கிடைக்கும்.

पीतोदका जग्धतृणा दुग्धदोहा निरिन्द्रियाः ।
अनन्दा नाम ते लोकास्तान् स गच्छति ता ददत् ॥ ३ ॥

## 4

இவ்வாறு யோசித்து, "அப்பா! என்னை யாருக்கு தக்ஷிணையாகக் கொடுக்கப்போகிறீர்?" என்று தகப்பனுரைக் கேட்டான். இப்படியே இரண்டாம் முறை, மூன்ரும் முறையும் கேட்டான். அவர் அதற்கு, "உன்னை எமனுக்குக் கொடுத்தேன்!" என்ருர்.

*முதலில் தகப்பனுர் விடை சொல்லவில்லை. ஆகையால் திரும்பத் திரும்பக் கேட்டான். அந்நாட்களில் வேதத்தைப் பின்பற்றுபவர்கள் வாயிலிருந்து வெளிப்பட்ட சொல் ஏதாயினும், பூர்த்தி செய்தே தீரவேண்டும். தவறக்கூடாது. கொடுத்த தானத்தைப் பின்வாங்குதல் ஆகாது. ஆகையால் நசிகேதன் எமனிடம் போக ஆயத்தமாஞன்.*

स ह्योवाच पितरं तत कस्मै मां दास्यसीति ।
द्वितीयं तृतीयं तं ह्योवाच मृत्यवे त्वा ददामीति ॥ ४ ॥

## 5

*பின்வருமாறு தனக்குள் தானே நசிகேதன் சொல்லிக் கொள்கிருன்:*

எனக்குப் பின் வெகுபேர்கள் எமனிடம் போகப் போகிருர்கள். இதற்கு முந்தியும் வெகுபேர்கள் அவனிடம் சென்றிருக்கிருர்கள். ஆகையால் நான் எமனிடம் போவதில் விசேஷம் ஒன்றும் இல்லை. என்ருல் எமனுக்கு என்ன ஆகவேண்டும்?*

बहूनामेमि प्रथमो बहूनामेमि मध्यमः ।
किं स्विद् यमस्य कर्तव्यं यन्मयाद्य करिष्यति ॥ ५ ॥

---

*★ "நான் அநேக சீடர்களைவிட மேம்பட்டவனுகவும் அநேக நல்ல சீடர்களுள் ஒருவனுகவும் இருக்க, ஏன் என்னை எமனுக்குக் கொடுத்துவிடுகிறேன் என்று தகப்பனுர் சொல்லி விட்டார்?" என்று தனக்குள் நசிகேதன் யோசித்ததாக இந்த சுலோகத்திற்கு ஸ்ரீ சங்கராச்சாரியாருடைய உரை.*

## 6

*நசிகேதன் தனக்குள் சொல்லிக் கொள்கிறன்.*★

இதற்குமுன் எத்தனையோ பேர் இறந்தார்கள். அவ்வாறே இனியும் பிறந்து இறக்கப் போகிறுர்கள். மானிடப் பிறப்பும் இறப்பும், பயிர் முளைப்பதும் அழிவதும் மறுபடியும் முளைப்பதும் போலத்தானே? இதைப் பற்றி என்ன விசாரம்?

अनुपश्य यथा पूर्वे प्रतिपश्य तथापरे ।
सस्यमिव मर्त्यः पच्यते सस्यमिवाजायते पुनः ॥ ६ ॥

## 7

*நசிகேதன் எமனுடைய அரண்மனையை அடைகிறுன். வாசலில் மூன்று நாள் காத்திருக்க வேண்டியதாயிற்று. காலவரை முடிந்து மரணமடையாமல், எதிர்பாராத வண்ணம் வந்தபடியால் எமன் அவனை ஒப்புக்கொள்ள ஆயத்தமாக வில்லை என்று வைத்துக்கொள்ள வேண்டும். மூன்று நாள் காத்திருந்தும் எமன் ஏற்றுக்கொள்ள வரவில்லை.*

---

★ *இவ்விடத்தில் ஸ்ரீ சங்கராச்சாரியாருடைய உரை வேறு. அவசரத்தில் வேடிக்கையாகவோ கோபமாகவோ சொன்ன சொல்லின்படி மகனை எமனுக்குக் கொடுத்துவிடத் தகப்பனுர் தயங்கியதாகவும், அதன்மேல் " நம்முடைய குலத்தில் பிறந்த முன்னோர்களும் இப்போதுள்ள பெரியோர்களும் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதைக் கவனித்து, சொன்ன சொல்லைத் தவருமல் என்னை எமனுக்கு தக்ஷிணையாகக் கொடுத்துவிடுங்கள். மனிதன் பிறப்பதும் இறப்பதும் சாதாரணமாயிற்றே! விசாரப்பட வேண்டாம்" என்று நசிகேதன் தகப்பனுருக்குச் சமாதானம் சொன்னதாக வைத்து பொருள் கூறுகிறுர்.*

"வீட்டுக்கு விருந்தினனாக வந்த பிராமணனை அக்னியைப்போல் கருதுவார்கள், ஜலம் கொண்டு வந்து, அக்னியைத் தணிப்பதுபோல் விருந்தினன் காலுக்கு நீர் வார்ப்பார்கள். ஆகையால், எமனே! காத்திருக்கும் விருந்தினனுக்கு ஜலம் கொண்டு போவாயாக!"

விருந்தினனை சந்தோஷமாக எதிர்கொண்டு, காலுக்கு ஜலம் வார்த்து வீட்டுக்குள் அழைத்துப் போவது இல்லற முறை. நசிகேதனை இறந்தவர்களுடைய கணக்கில் ஒப்புக் கொள்ள எமனுக்கு மனம் வரவில்லை. எமனுடைய பரிவாரத்தில் ஒருவர் எமனுக்கு இவ்வாறு சொல்லியதாக வைத்துக் கொள்ள வேண்டும். எமனுடைய பரிவாரத்தில் ஒருவர் சொன்னதாக ஸ்ரீ சங்கராச்சாரியர் உரை. அப்படியல்லாமல் நசிகேதனே இந்த இரண்டு சுலோகங்களை எமனுக்குச் சொன்னதாகவும் வைத்துக்கொள்ளலாம்.

वैश्वानरः प्रविशत्यतिथिर्ब्राह्मणो गृहान् ।
तस्यैतां शान्तिं कुर्वन्ति हर वैवस्वतोदकम् ॥ ७ ॥

8

" விருந்தினனாக வந்த பிராமணனை உபசரித்து உணவு அளிக்காமல் போனால் அவ்வாறு முறை தவறிய மூடன் அறிவில்லாதவனாகக் கருதப்படுவான். அவனுக்குப் பல துன்பங்கள் நேரிடும். அவனுடைய எண்ணங்களும் அவன் எதிர்பார்த்த நலன்களும் கிட்டாமல் போகும். நல்லவர்களுடைய சேர்க்கையும் சம்பாஷணையும், செய்த தானதர்மங்கள், வேள்விகள், இவைகளின் பயன்களும், குழந்தைகளும், செல்வமும், எல்லாம் இழந்து விடுவான், அறியாயோ?"

आशाप्रतीक्षे सङ्गतं सूनृतां
चेष्टापूर्ते पुत्रपशूंश्च सर्वान् ।
एतद् वृङ्क्ते पुरुषस्याल्पमेधसो
यस्यानश्नन् वसति ब्राह्मणो गृहे ॥ ८ ॥

9

எமன் நசிகேதனுக்குச் சொல்லுகிறான் : "ஓ பிராம் மண சிரேஷ்டனே ! விருந்தினனாக வந்து என் மனை வாயிலில் மூன்று நாள் உணவின்றிக் காத்திருந்தாய்.

உன்னை நான் வணங்குகிறேன். நான் செய்த பிழை தீர நீ என்னிடம் மூன்று வரங்களைக் கேட்பா யாக. எனக்கு மங்களம் ஆகுக"

तिस्रो रात्रीर्यदवात्सीर्गृहे मेऽनश्नन् ब्रह्मन्नतिथिर्नमस्यः ।
नमस्तेऽस्तु ब्रह्मन् स्वस्ति मेऽस्तु तस्मात् प्रति त्रीन् वरान् वृणीष्व ॥९॥

10

இதைக் கேட்டு நசிகேதன், "என் தகப்பனார் கௌதமர் மனதில் எவ்விதக் கவலையுமின்றி அமைதி பெறவேண்டும். என்னைப் பற்றிச் சினம் கொள்ளா மல் இருக்கவேண்டும். நான் உன்னிடமிருந்து விடை பெற்றுத் திரும்பிப் போகும் போது, (அதாவது மறு பிறப்பு அடைந்து மண்ணுலகம் செல்லும்போது) என் னைத் தன் மகனாக அறிந்து அன்போடு ஏற்றுக் கொள்ள வேண்டும். இதுவே மூன்று வரங்களில் முதலாவதாக நான் வேண்டுவது "என்றான்.

மறு பிறப்பு அடையும் காலத்தில் முன் ஜன்மத்தின் சம்பந்தங்கள் முற்றும் மறந்து போகும். இதற்கு மாறாக, தகப்பனிடம் வைத்த அன்பினால் இவ்வாறு வேண்டுகிறான். அவ்வாறே எமன் வரம் தருகிறான்.

शान्तसङ्कल्पः सुमना यथा स्याद्वीतमन्युर्गौतमो माभिमृत्यो ।
त्वत् प्रसृष्टं माभिवदेत् प्रतीत एतत् त्रयाणां प्रथमं वरं वृणे ॥ १० ॥

## 11

"உன் தகப்பனுர் கவலையற்று இரவில் தூங்குவார். நீ என்னிடமிருந்து விடுபட்டுத் திரும்பிப் போகும்போது, நீ தன் மகன் என்பதை அவர் கண்டறிந்து கொள்வார். உன்னைக் கண்டதும் கோபம் தீர்ந்து சாந்தம் அடைவார்."

நசிகேதன் கேட்ட முதல் வரத்தை இவ்வாறு எமன் தந்து விட்டான்.

यथा पुरस्ताद् भविता प्रतीत
औद्दालकिरारुणिर्मत्प्रसृष्टः ।
सुखं रात्रीः शयिता वीतमन्यु-
स्त्वां ददृशिवान् मृत्युमुखात् प्रमुक्तम् ॥ ११ ॥

## 12—13

பிறகு நசிகேதன் சொன்னதாவது :

"சுவர்க்க லோகத்தில் பயம் என்பது இல்லவே இல்லை யல்லவா? அவ்விடம் நீயும் கிடையாது. (அதாவது, மரணம் இல்லை). அங்கே மூப்பு என்பதும் கிடையாது. பசி, தாகம் என்பதும் அங்கே இல்லை. அங்கே உள்ளோர் துயரத்தைக் கடந்து எப்போதும் இன்புற்று இருப்பார்கள். எமனே! அத்தகைய சுவர்க்க போகத்தைத் தரும் வேள்வி உனக்குத் தெரியும். சிரத்தை கொண்ட எனக்கு இறவாமையையும் மேலுலகத்தையும் தரும்படியான அவ்வேள்வியை உபதேசிப்பாயாக. இதுவே நீ எனக்குத் தந்த வரங்களில் இரண்டாவதாகக் கேட்கிறேன்" என்ருன்.

உபநிஷத்துகளின் முக்கிய கருத்து, இவ்வுலகத்தில் பெறக்கூடிய செல்வ போகங்களுக்கும், வேள்விகளால் அடையக்கூடிய சுவர்க்க லோக போகங்களுக்கும் கூட முடிவு உண்டென்று காட்டி, ஆத்மஞானமே ஜீவனைப் பரம்பொருளுடன்

ஒன்று படுத்தி, கர்ம பாசத்திலிருந்து பூரண விடுதலை தரக் கூடியது என்று போதிப்பதாகும். ஆனால் இந்த உண்மை யைப் படிப் படியாக உபதேசிக்கும் நோக்கத்துடன், முதலில் தகப்பனாரிடம் வைத்த அன்பினால் தூண்டப்பட்டு நசிகேதன் முதல் வரம் கேட்டதாகவும், அடுத்தபடியாக சுவர்க்கம் முதலிய போகங்களை விரும்பி வேள்வி முறை உபதேசம் கேட்டதாகவும், பிறகு பரிபூரண முக்தியை வேண்டி ஞானோ பதேசம் கோரியதாகவும், நசிகேதன் கதை அமைக்கப்பட் டிருக்கிறது.

स्वर्गे लोके न भयं किंचनास्ति
न तत्र त्वं न जरया बिभेति ।
उभे तीर्त्वाऽशनायापिपासे
शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १२ ॥
स त्वमग्निं स्वर्ग्यमध्येषि मृत्यो
प्रब्रूहि तं श्रद्दधानाय मह्यम् ।
स्वर्गलोका अमृतत्वं भजन्त
एतद् द्वितीयेन वृणे वरेण ॥ १३ ॥

## 14

எமன் சொல்லுகிறான் :

" நீ கோரும் வேள்வியை நான் அறிவேன். அதை உனக்கு விளக்குகிறேன். நன்கு கவனித்துக்கேள் : அந்தத் தீயே அழிவிலாப் பதவியைத் தரும். அதுவே உலகத்தைத் தாங்கும் சக்தி. அந்த அழிவிலாத அக்னியே உள்ளத்துக்குள்ளும் மறைந்து நிற்கிறது. அறிந்து கொள்வாயாக " என்றான்.

புண்யலோகத்தை விரும்பி, அதற்கு வேண்டிய வேள் வியை உன் அறியாமையால் நீ கேட்கிறாய். முடிவிலா ஆனந்தத்தைத்தரும் பொருள் உன் உள்ளத்துக்குள் கோயில்

கொண்டிருக்கிறது. ஆத்மாவின் உண்மை சொருபத்தை அறிவதே அழிவிலாத இன்பத்தைத் தரக்கூடிய வேள்வி என்ற பொருளும் இந்த சுலோகத்தில் மறைந்து நிற்கிறது.

சாதாரண முறையில் வைதிக வேள்வியை நசிகேதனுக்குக் கற்றுக் கொடுப்பதாக எமன் பதில் சொல்லுகிறான். ஆயினும் ஞானமே வேள்வி என்ற பொருளும் அடங்கி நிற்கிறது. ஆத்ம ஞானத்தையும் ஒரு வேள்வியாகச் சொல்வதை பகவத் கீதையில் 4-வது அத்தியாயம் சுலோகங்கள் 23 முதல் 30 வரையில் பார்க்க. "இந்தத் தீயானது உள்ளத்தில் மறைந்து நிற்கிறது" என்று இந்த சுலோகத்தின் முடிவிலும், "உலகத்திற்கு முதற்காரணம்" என்று அடுத்த சுலோகத்திலும் அந்த தீயைப் பற்றிச் சொல்லுவது இந்த உட்பொருளைக் காட்டுகிறது. சுருதியில் அக்னி வாயு இந்திரன் முதலிய தேவதைகளின் பெயர்கள் பரம்பொருளையே குறிக்கும் என்பது முன்னோர்களின் சித்தாந்தம்.

प्र ते ब्रवीमि तदु मे निबोध स्वर्ग्यमग्निं नचिकेतः प्रजानन् ।
अनन्तलोकाप्तिमथो प्रतिष्ठां विद्धि त्वमेतं निहितं गुहायाम् ॥ १४ ॥

## 15

புராதனமான அந்தத் தீயைப்பற்றி எமன் நசிகேதனுக்கு எவ்வளவு கல் அடுக்கு, எத்தனை முறை, என்ற விஷயங்களை எல்லாம் சாங்கோபாங்கமாக விளக்கி, அவனையே அவைகளைத் திரும்பச் சொல்லும்படி செய்து, அவனும் அவ்வாறே பிழையின்றிச் சொல்ல எமன் மகிழ்ச்சி அடைகிறான்.

लोकादिमग्निं तमुवाच तस्मै
या इष्टका यावतीर्वा यथा वा ।
स चापि तत् प्रत्यवदद् यथोक्त-
मथास्य मृत्युः पुनरेवाह तुष्टः ॥ १५ ॥

16

நசிகேதனிடம் மிகுந்த அன்புகொண்டு எமன் சொன்னதாவது: “இந்த வேள்வி உன் பெயருடன் நிற்குமாக. இது உனக்கு நான் தரும் மற்றொரு வெகுமானம். பற்பல தோற்றங்களையும் காட்டவல்ல இந்த அழகிய மாலையையும் நீ ஒப்புக்கொள்வாயாக.

तमब्रवीत् प्रीयमाणो महात्मा
वरं तवेहाद्य ददामि भूयः ।
तवैव नाम्ना भवितायमग्निः
सृङ्कां चेमामनेकरूपां गृहाण ॥ १६ ॥

17

“மூன்று சேர்க்கையும் பெற்று, இவ்வேள்வியை மும்முறை செய்து, மூன்று கடமைகளையும் நடத்தியவன், பிறப்பு-இறப்பு என்பதைத் தாண்டி, பிரம்மத்தினின்று உண்டானதும், சிறப்பும் புனிதமும் பொருந்தியதுமான பொருளை அறிந்து, குறைவற்ற சாந்தியைப் பெறுவான்.

त्रिणाचिकेतस्त्रिभिरेत्य संधिं
त्रिकर्मकृत्तरति जन्ममृत्यू ।
ब्रह्मजज्ञं देवमीड्यं विदित्वा
निचाय्येमां शान्तिमत्यन्तमेति ॥ १७ ॥

18

“தன்னுள் கிடக்கும் அந்தராத்மாவையே வேள்வித்தீயாகக் கொண்டு, மூவழியிலும் குறைவின்றி வேள்வியை முடிப்பவன், எமன் வலையில், அதாவது ஆசாபாசங்களில் சிக்காமல், மரணம் அணுகுவதற்கு முன்னமேயே துயரத்தைத் தாண்டி மேல் உலகப் பதவியை அடைந்து இன்புறுவான்.

மனம் வாக்கு காயம் இம்மூன்றையும் ஒன்ருகச் செலுத்தி, உள்ளத்தில் வீற்றிருக்கும் பரமாத்மாவே வேள்வித் தீ என்று அறிந்து, எல்லா ஆசைப் பற்றுகளையும் அந்தத் தீயில் எரித்தவன் பரமபதம் அடைவான் என்பது இந்த சுலோகங்களின் உட்பொருள்.★

त्रिणाचिकेतस्त्रयमेतद् विदित्वा
य एवं विद्वांश्चिनुते नाचिकेतम् ।
स मृत्युपाशान् पुरतः प्रणोद्य
शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १८ ॥

## 19

"நசிகேதனே! இதுவே நீ அறிய விரும்பின சிறந்த வேள்வி. நீ கேட்ட இரண்டாம் வரமும் தந்தேன். மக்கள் இதை உன் வேள்வி என்று உன் பெயரிட்டுச் சொல்வார்கள். மூன்ரும் வரம் கேட்டுப் பெறுவாயாக."

---

★ "மூன்று சேர்க்கையும் பெற்று" என்பதைத் தகப்பனுர், தாயார், ஆசாரியன் ஆகிய மூவருடன் சம்பந்தப்பட்டு என்று ஸ்ரீ சங்கராச்சாரியார் விவரிக்கிருர். இது வைதீக கர்ம மார்க்கத்தை ஒட்டிய பொருள்.

இதுவரையில் செய்யப்பட்ட உபதேசம் வைதீக கர்ம மார்க்கத்துக்கு உரித்தானது. கர்ம மார்க்கம் என்ருல், இதைச் செய்யவேண்டும், இதைச் செய்யக்கூடாது என்ற சாஸ்திர நியமனங்களை அறிந்து அதன்படி நடத்தல். நசிகேதன் இதுவரையில் பெற்ற வரங்களால் திருப்தியடையவில்லை. ஆத்மாவின் உண்மை சொரூபத்தை அறிந்தால் தான் அழிவிலாத பேறு பெறலாம். அதைப்பற்றி உபதேசம் அடைந்து ஞான ஒளி பெறவேண்டும் என்று அவன் மனம் தூண்டிற்று.

அற வழியில் நின்று இம்மைச் சுகங்கள் பெறுவது முதல் படி. ஆகையால் தகப்பனுரின் சந்தோஷத்தை எண்ணி

17

एष तेऽग्निर्नचिकेतः स्वर्ग्यो
यमवृणीथा द्वितीयेन वरेण ।
एतमग्निं तवैव प्रवक्ष्यन्ति जनास
स्तृतीयं वरं नचिकेतो वृणीष्व ॥ १९ ॥

20

உடலினுக்குள் உடலைத்தவிர வேறு ஒரு சேதனப் பொருள் உண்டு. அது உடல், புலன், மனம் இவைகளினின்று வேறுபட்டு நிற்கும் தனிப் பொருள். அது உடலினின்றும் பிரிந்து தனியாக உளதாகுமா? இந்த விஷயத்தைப்பற்றி மக்கள் வெவ்வேறு விதமான அபிப்பிராயம் சொல்லுகிறார்கள். உண்டு என்று சிலரும், இல்லை என்று வேறு சிலரும் சொல்லுகிறார்கள். இந்த சந்தேகத்தைத் தீர்த்து நீ எனக்கு அறிவு ஊட்டவேண்டும் என்று நசிகேதன் எமனைக் கேட்டு அவனிடம் உபதேசம் பெற்றதாக வைத்து ரிஷி நமக்கு உபதேசம் செய்கிறார்.

"மரணத்தை ஒட்டிய சந்தேகம்—உடல் அன்றி ஒரு சிலர் தனிப்பொருள் உண்டு என்றும், ஒரு சிலர் யாதுமில்லை என்றும் சொல்லுகிறார்களே—இதைக் குறித்து உன்னிடம் உபதேசம் பெற்று நான் ஐயம் தீர்த்துக் கொள்ளவேண்டும். இதுவே நீ தருவதாக அருளின மூன்றும் வரமாகக் கேட்கிறேன்" என்றான் நசிகேதன்.

येयं प्रेते विचिकित्सा मनुष्येऽस्तीत्येके नायमस्तीति चैके ।
एतद् विद्यामनुशिष्टस्त्वयाऽहं वराणामेष वरस्तृतीयः ॥ २० ॥

---

நசிகேதன் முதல் வரம கேட்டான். மானிட சரீரம் நீத்து, அமரர் பதவியும், மூப்பு இல்லாத உடலும் அடைந்து, மேலுலக சுகங்கள் அடைவது இரண்டாம் படி. இரண்டாவதாகக் கேட்ட வரத்தின் எண்ணம் அது. மெய்ஞ்ஞானம் பெற்று, கடவுளுடன் ஒன்றுபட்டுப் போவது மூன்றாம்படி. அதுவே அமர பதத்தைவிட மேன்மையான விஷ்ணு பதம் என்பது. ஆகையால் நசிகேதன் ஆத்மஞான உபதேசத்தை மூன்றாவது வரமாகக் கேட்கப்போகிறான்.

## 21

" அப்பா நசிகேதா! இதை மட்டும் கேட்கவேண்டாம். இது தேவர்களுக்குங் கூட என்றும் தீராத சந்தேகம். மிகவும் நுட்பமான விஷயம். எவ்வளவு கேட்டாலும் முன்போலவேவிஷயம் சந்தேகத்திலேயே நிற்கும். என்னை வற்புறுத்தாதே! இதில் நான் சிக்கிக் கொள்ளாமல் நீ வேறு வரம் கேட்க வேண்டும்" என்றான்.

எமன் இவ்வாறு மறுக்கப்பார்த்தது வேதாந்த விமரிசனத்தின் கடினத்தை எடுத்துக்காட்டவே. சீடனது தகுதியையும் உறுதியையும் பரீட்சை செய்ய இவ்வாறு சொன்னதாக வைத்துக் கொள்ள வேண்டும்.

देवैरत्रापि विचिकित्सितं पुरा न हि सुविज्ञेयमणुरेष धर्मः ।
अन्यं वरं नचिकेतो वृणीष्व मा मोपरोत्सीरति मा सृजैनम् ॥ २१ ॥

## 22

*நசிகேதன் சொல்லுகிறான் :*

" எமனே! இது தேவர்களுக்கும் விளங்காத விஷயம் என்றும், ஐயம் தீரச் சொல்வது கடினம் என்றும் சொல்கிறாயே. இத்தகைய விஷயத்தை அறிந்து கொள்வதல்லவோ பெரும்பேறு? இதை விளக்கத் தகுந்த ஆசாரியன் நீ அல்லது வேறு யார்? உன்னை அடைந்த நான் இந்த உபதேசம் பெறாமல் போகலாமா? இந்த ஞானத்தை உன்னிடம் பெறுவதைவிட வேறு அடையக்கூடிய ஒரு வரமும் உண்டோ?"

देवैरत्रापि विचिकित्सितं किल त्वं च मृत्यो यन्न सुविज्ञेयमात्थ ।
वक्ता चास्य त्वादृगन्यो न लभ्यो नान्यो वरस्तुल्य एतस्य कश्चित् ॥ २२ ॥

## 23

ஆத்ம ஞானத்தின் பெருமை இதனுல் காட்டப்பட்டது. இவ்வாறு வற்புறுத்தப்பட்ட எமன் நசிகேதனுடைய மனதை இன்னும் சோதிக்கப் பல ஆசைகளைக் காட்டுகிறுன்.

எமன் சொல்லுகிறுன் :

" நீ கோரினுயானுல் நூறு வருஷம் பிழைக்கும் மக்கட்பேறும் தருகிறேன். பெரும் பசுக் கூட்டங்களும் யானைகளும் குதிரைகளும் செல்வமும் தருகிறேன். விசாலமான தேசத்தை ஆண்டு அரசு புரிவாய். இவை அனைத்தையும் பெற்றுப் பல்லாண்டு வாழ வரம் கேள். தருகிறேன்."

शतायुषः पुत्रपौत्रान् वृणीष्व
बहून् पशून् हस्तिहिरण्यमश्वान् ।
भूमेर्महदायतनं वृणीष्व
स्वयं च जीव शरदो यावदिच्छसि ॥ २३ ॥

## 24

" இவை உனக்குப் பிடிக்காவிட்டால் இதற்குச் சமானமான வேறு எந்த வரமாவது கேள். செல்வம், நீண்ட ஆயுள், ராஜ்ய பதவி எதையேனும் வேண்டிக் கொள். இஷ்டப்படி எதையும் அடைந்து மகிழ்ந்து அனுபவிக்க வரம் தருகிறேன், கேள்.

एतत् तुल्यं यदि मन्यसे वरं
वृणीष्व वित्तं चिरजीविकां च ।
महाभूमौ नचिकेतस्त्वमेधि
कामानां त्वा कामभाजं करोमि ॥ २४ ॥

25

" மக்கள் உலகத்தில் விரும்பும் எந்த அரிய பேறுகளாயினும் சரி, அனைத்தையும் உன் இஷ்டப்படி கேள். தருகிறேன். இதோ பார் ! வீணைகளை ஏந்திய இந்த தேவ கன்னிகைகளைப் பார் ! அவர்கள் வீற்றிருக்கும் ரதங்களுடன் அவர்களை உன்னுடன் அனுப்புகிறேன். மானிடர்கள் அடையக்கூடாத இக் கன்னிகைகளை என்னிடம் நீ பெற்று, அவர்களால் உபசரிக்கப்பெற்று, சுகமாக வாழ்வாயாக. மரணத்தைப் பற்றிய ரகசியங்களை மட்டும் என்னைக் கேட்க வேண்டாம். அதில் உனக்கு என்ன சுகம் உண்டாகும் ?"

ये ये कामा दुर्लभा मर्त्यलोके
  सर्वान् कामांश्छन्दतः प्रार्थयस्व ।
इमा रामाः सरथाः सतूर्या
  नहीदृशा लम्भनीया मनुष्यैः ।
आभिर्मत्प्रत्ताभिः परिचारयस्व
  नचिकेतो मरणं मानुप्राक्षीः ॥ २५ ॥

26

இவ்வாறெல்லாம் எமனால் பரீட்சிக்கப்பட்ட போதிலும், நசிகேதன் உறுதியாக நின்றான். அவன் விடை சொன்னதாவது :

" காலனே நீ காட்டும் இச்சுக போகங்கள் இன்று இருப்பதாகத் தோற்றம் காட்டி, நாளை மறைந்துபோகும் பொருள்கள். இவை அனைத்தும் இன்பம் தருவதுபோல் காட்டி மனிதனுடைய இந்திரியங்கள் அனைத்தின் சக்தியையும் கரைத்துக் கொண்டே செல்லும். ஆகையால் இவை உண்மையில்

சுகம் தருவன அல்ல. நீண்ட ஆயுளைப் பற்றிச் சொல்லுகிறாய். முடிவிலாக் கால அளவினுக்குள், மனிதனுடைய ஆயுள் எவ்வளவு நீண்டதாயினும் அது எம்மாத்திரமாகும்? அற்பமே அல்லவா? இந்த ரதங்களும் ஆடல் பாடல்களும் எனக்கு வேண்டாம். உன் வசமே இருக்கட்டும்.*

श्वोभावा मर्त्यस्य यदन्तकैतत् सर्वेन्द्रियाणां जरयन्ति तेजः ।
अपि सर्वं जीवितमल्पमेव तवैव वाहास्तव नृत्यगीते ॥ २६ ॥

## 27

"மனிதன் என்ன செல்வத்தை அடைந்தாலும் திருப்தி என்பது இல்லை. தவிர, உன் தரிசனம் எப்போதும் காத்திருக்கிறதன்றோ? இதற்குள்ளாகிய நாங்கள் என்ன செல்வம் அடைந்து என்ன இன்பம் காணப்போகிறோம்? நீ அல்லவோ எங்கள் ஆயுளுக்கு அதிகாரி? உன் இச்சை அல்லவோ எங்கள் ஆயுளின் வரம்பு? ஆகையால் நான் கேட்ட ஆத்மஞான உபதேசமே கேட்கத் தகுந்த வரம். அதைத் தருவாயாக.*

न वित्तेन तर्पणीयो मनुष्यो लप्स्यामहे वित्तमद्राक्ष्म चेत्त्वा ।
जीविष्यामो यावदीशिष्यसि त्वं वरस्तु मे वरणीयः स एव ॥ २७ ॥

---

*"தவ ஏவ" என்றால், நீயே வைத்துக்கொள், எனக்கு வேண்டாம், என்று சாதாரண மக்களின் பேச்சு நடைமுறையில் நசிகேதன் சொன்னதாக முன்னோர்களின் உரை. இவ்வாறு வைத்துக்கொள்ளாமல், "இந்த ரதங்களும் எமன் முன்னிலையில் என்ன பயன் தரும்? ஒரு நாள் இல்லாவிடில் ஒரு நாள் நீ வந்து உயிரைக்கொண்டு ஏகுவாய். கொடுப்பது போல் காட்டி, மறுபடி உன் வசமே திரும்பும் பொருளைக் கொடுக்கிறேன் என்கிறாய். இவை உனதேயாகும். இவை உண்மையில் கொடுத்த வரங்கள் ஆகமாட்டா." இவ்வாறும் பொருள் சொல்லலாம். அடுத்தாற்போல் வரும் பேச்சும் இதற்கு ஒட்டியதாகப் பொருந்துகிறது.

மனிதனுக்குத் திருப்தி என்பது கிடையாது. தவிர மகாத்மாவான உன்னைத் தரிசிக்கும் பேறு பெற்றவன் செல்வமும் ஆயுளும் எப்படியாவது பெறலாம். அதை நான் ஏன் வரமாகக் கேட்க வேண்டும்? நான் கோரும் ஆத்மஞான உபதேசமே சிறந்த வரம். அதைத் தருவாய் என்று நசிகேதன் வற்புறுத்தியதாக இந்த சுலோகத்துக்கு முன்னோர்களின் உரை. ஓரளவு சிலேடையைப் புகுத்தினால் மேலே சொல்லிய பொருளைக் கொள்ளலாம்.

## 28

"ஆடல் பாடல் சுகங்களின் உண்மையான தன்மையை அறிந்த ஒருவன், நீண்ட ஆயுள் வேண்டும் என்று விரும்பவே மாட்டான். அச்சுகங்களிலும் அந்த ஆயுளிலும் ஒரு பயனும் இல்லை என்பதை அறிவான். அழிவும் முடிவும் இல்லாத பொருளைக் கருத்தில் அடைந்த மானிடன் இத்தகைய அற்ப சுகங்களைக் கோரமாட்டான்.

अजीर्यताममृतानामुपेत्य
जीर्यन् मर्त्यः क्वधःस्थः प्रजानन् ।
अभिध्यायन् वर्णरतिप्रमोदा-
नतिदीर्घे जीविते को रमेत ॥ २८ ॥

## 29

"காலனே! மக்கள் ஐயப்படும் இந்த மறுமைப் பிரச்னையை எனக்கு விளக்கித் தருவாயாக"—நசிகேதன் வேறு வரம் விரும்பவில்லை. மறைந்து நிற்கும் இந்தப் பொருளை விளக்கித் தரவேண்டும் என்பதே அவன் கோரிக்கை.

यस्मिन्निदं विचिकित्सन्ति मृत्यो
यत् सांपराये महति ब्रूहि नस्तत् ।
योऽयं वरो गूढमनुप्रविष्टो
नान्यं तस्मान्नचिकेता वृणीते ॥ २९ ॥

இரண்டாம் அத்தியாயம்

# ஞானத்தை அடையும் யோகமுறை

## 1

"இன்பம் தரும் பொருள்கள் வேறு; நன்மை தரும் பொருள்கள் வேறு. இவை மனிதனை வெவ்வேறு பக்கம் இழுக்கின்றன. அவற்றின் பயன்களும் வெவ் வேறு. நல்லதைப் பின்பற்றுபவன் நன்மை அடை வான். நல்லதை விட்டு இன்பத்தையே விரும்பிச் செல் பவன் மெய்ப்பொருளை இழந்து கேடு அடைவான்.

अन्यच्छ्रेयोऽन्यदुतैव प्रेय-
स्ते उभे नानार्थे पुरुषं सिनीतः ।
तयोः श्रेय आददानस्य साधु भवति
हीयतेऽर्थाद्य उ प्रेयो वृणीते ॥ १ ॥

## 2

"நன்மை தரும்பொருளும் இன்பம் தரும் பொரு ளும் இருவகைப் பொருளும் மனிதன் முன் நிற்கின் றன. மதி உள்ளவன் நன்கு கவனித்து இரண்டுக்கும் உள்ள வேற்றுமையைக் கண்டு கொள்வான். கண்டு கொண்டு இன்பத்தை விட்டு விட்டு நல்லதையே மேலானதென்று கொள்ளுவான். மதியில்லாதவன் இம்மைக்கு சுகம் என்று இன்பத்தைக் கொள்ளுவான்.

இன்பம் புலனுக்கு சுகம் தருவதுபோல் தோன்றும். அதுவே நலனாகத் தோன்றும். நல்லது கஷ்டமாகத் தோன்றும். உடலின் சுபாவத்தால் தூண்டப்பட்டு, உடலைக் கொண்டு சுகம் பெறலாமென்று மதியில்லாதவன் நல்லதைத் தள்ளிவிட்டு, இன்பத்தைத் தொடர்ந்து கேடு சம்பாதித்துக் கொள்ளுகிறான். இனிதென்று தோன்றும் பொருள்களினு லுண்டாகும் சுகத்தை, அந்த சுகம் தோன்றிய க்ஷணத்தில் மறையும் என்பதை அறியாமல் அவைகளைத் தேடுவதில் காலம் கழிப்பான்.

श्रेयश्च प्रेयश्च मनुष्यमेत-
स्तौ संपरीत्य विविनक्ति धीरः ।
श्रेयो हि धीरोऽभिप्रेयसो वृणीते
प्रेयो मन्दो योगक्षेमाद् वृणीते ॥ २ ॥

## 3

"இன்பம் தரும் பொருள்களையும் உள்ளத்தைக் கவரும் தோற்றங்களையும் ஆராய்ந்து சிந்தித்துத் தள்ளிவிட்டாய். இகச் செல்வங்களும் சிற்றின்பங் களும் நிறைந்த கர்ம மாலையை நீ மறுத்துவிட்டாய். கணக்கற்ற மானிடர்களை வஞ்சித்துக் கெடுக்கும் இப்பொய்ச் சுகங்களை நீ ஒப்புக் கொள்ளாமல் மறுத்தாய்."

நசிகேதனை எமன் புகழ்ந்து மகிழ்ச்சியடைகிறான்.

स त्वं प्रियान् प्रियरूपांश्च कामा-
नभिध्यायन् नचिकेतोऽत्यस्राक्षीः ।
नैतां सृङ्कां वित्तमयीमवाप्तो
यस्यां मज्जन्ति बहवो मनुष्याः ॥ ३ ॥

"அறிவுக்கும் அறியாமைக்கும் வெகு தூரம். அவை ஒன்றுக்கொன்று எதிரிடை. வெவ்வேறான வழியில் செல்லும். பல ஆசைகள் முன் வந்து நின்றபோதிலும், உறுதியாக நின்று ஞானத்தையே வேண்டிய உன்னைப் பாராட்டுகிறேன்.

दूरमेते विपरीते विषूची
अविद्या या च विद्येति ज्ञाता ।
विद्याभीप्सिनं नचिकेतसं मन्ये
न त्वा कामा बहवोऽलोलुपन्त ॥ ४ ॥

## 5

"அறியாமையில் மூழ்கி வாழ்நாட்களைக் கழிக்கும் மனிதர்கள், தாங்கள் பல நூல்களைக் கற்றவர்கள் என்றும், ஞானம் அடைந்துவிட்டவர்கள் என்றும் தங்களைத் தாங்களே கருதிக்கொண்டு, குருடனால் வழிகாட்டப்பட்ட குருடர்களின் கூட்டத்தைப்போல் வழிதப்பிச் சுற்றிச் சுற்றி அலைவார்கள்.

இகசுகங்களைத் தேடி வாழ்பவர்கள் ஓரளவு சுகம் அநுபவிப்பதால் தாங்களே அறிவு படைத்தவர்கள் என்றும், வாழ்க்கையிலுள்ள சுகங்களை விட்டுவிட்டு ஞானத்தைத் தேடும் மனிதர்களை மூடர்கள் என்றும் நினைப்பது சகஜம். அறியாமையில் கிடக்கும் இவர்கள் ஆசைகளால் தூண்டப்பட்டு, வழி தவறி, முன் செல்லத் தெரியாமல் அலைகிறார்கள். சுற்றிச் சுற்றித் திரிவார்கள் என்றால், பிறப்பு இறப்பு என்னும்

முடிவில்லாத சுழலில் சிக்கிக்கொள்வார்கள் என்று பொருள். ஞானமார்க்கத்தைப் பின்பற்றுமல் சுகபோகங்களைக் கருதி யாகாதி கர்மங்களைச் செய்து வரும் வைதீகர்களைக் கண்டிப்பதாகவும் 4, 5-வது சுலோகங்களுக்கு வியாக்கியானம் செய்யலாம்.

अविद्यायामन्तरे वर्तमानाः
स्वयं धीराः पण्डितं मन्यमानाः ।
दन्द्रम्यमाणाः परियन्ति मूढा
अन्धेनैव नीयमाना यथान्धाः ॥ ५ ॥

## 6

"அறிவு பெருதவன் செல்வத்தின் மோகத்தால் மதியிழந்து கிடப்பான். நற்பேறு அடையும் வழி அவனுக்குத் தென்படாது. இந்த உலகமே உண்மை, வேறு எதுவும் கிடையாது என்று எண்ணி, என் வசம் (அதாவது எமன் வசம்) திரும்பத் திரும்பச் சிக்குவான்.

न सांपरायः प्रतिभाति बालं
प्रमाद्यन्तं वित्तमोहेन मूढं ।
अयं लोकोनास्ति पर इति मानी
पुनः पुनर्वशमापद्यते मे ॥ ६ ॥

## 7

ஆத்மாவைப்பற்றிச் சரியாகச் சொல்லக் கேட்கப் பெறுகிறவர்கள் மிகச் சிலரேயாவர். அவ்வாறு கேட்டவர்கள்கூட உண்மையில் மெய்ஞ்ஞானம் அடைவதில்லை. ஆத்மாவைப்பற்றி உபதேசிக்கத் தகுந்த ஆசான் எங்கே? ஆசான் உண்டாயினும் அவனைச் சரியாக அடையும் சீடன் எங்கே? அவ்வாறு

இருவரும் சேர்ந்தாலுங்கூட, உபதேசத்தினுல் ஞானம் அடைந்த மானிடர்கள் வெகு சிலரே ஆவார்கள்.

கீதை 2—29 சுலோகத்திலும் இந்த விஷயம் காணலாம். உள்ளத்தில் மாசு நீங்கப் பெருததால், அந்தராத்மாவைப் பற்றி உபதேசம் பெற்ருலும் ஞானம் அடைவது கஷ்டம். ஆசைகள் புத்தியைக் கெடுக்கும். ஆசைப்பட்ட பொருளைப் பெருததினுல் உண்டாகும் கோபமும், கோபத்தினுல் உண்டாகும் புத்தி மயக்கமும், ஆத்ம ஞானம் பெறுவதற்குப் பெருந்தடையாகும். உபதேசம் பயனற்றுப் போகும்.

श्रवणायापि बहुभिर्यो न लभ्यः
शृण्वन्तोऽपि बहवो यं न विद्युः ।
आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा
आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः ॥ ७ ॥

## 8

"இந்த ஆத்மாவைக் கீழ்த்தர மனிதன் விளக்கிச் சொல்லித் தெரிந்துகொள்ள முடியாது. பலவாருகத் தோன்றிக் கலக்கம் ஏற்படும். ஞானம் ஏற்படாது. கோசரத்திற்கு உட்படாத பொருளை அறிவுக்குத் தந்து கொடுப்பது முடியாத காரியம். விளக்க வேண்டிய பொருள் அணுவைக் காட்டிலும் நுட்பமான பொருளானபடியால் அதைப்பற்றி நேர் முறையில் உபதேசித்து அறிவித்தல் முடியாது.

மற்றப் பொருள்களைப்பற்றிச் சொல்லி, இதுவல்ல அதுவல்ல என்று விலக்கும் முறையில்தான் ஆத்மாவைப்பற்றி உபதேசிக்க முடியும். இவ்வாறல்லாமல் அதைப்பற்றி அறிவு அடைய வேறு மார்க்கம் இல்லை.*

न नरेणावरेण प्रोक्त एष
सुविज्ञेयो बहुधा चिन्त्यमानः ।
अनन्यप्रोक्ते गतिरत्र नास्त्य-
णीयान् ह्यतर्क्यमणुप्रमाणात् ॥ ८ ॥

9

"புத்தி சாதுர்யத்தை உபயோகித்து ஆராய்ச்சி செய்வதனுலேயே, ஆத்மஞானத்தை அடைய முடியாது. நல்லுபதேசம் பெற்ருல்தான் அடைய முடியும். அன்புக்குரியவனே, நீ மெய்ப்பொருளேயே உறுதியாகப்பற்றி நிற்கிருய். உன்னைப்போன்ற சீடர்கள் எமக்குக் கிடைப்பது பெரும் பாக்கியம். நீ ஆத்மஞானத்தை அடையத் தகுந்தவன் என்பதில் சந்தேகம் இல்லை.

नैषा तर्केण मतिरापनेया
प्रोक्तान्येनैव सुज्ञानाय प्रेष्ठ ।
यां त्वमापः सत्यधृतिर्बतासि
त्वादृङ् नो भूयान्नचिकेतः प्रष्टा ॥ ९ ॥

10

"செல்வம் என்பது அழியும் பொருள். அழியாத பொருள் வேறு என்பதை நான் கண்டேன், அழிவில்லாத பதவியை எவ்வாறு அழியும் பொருளால் பெற முடியும்? அழிவில்லாத ஆனந்த நிலை வேண்டின் அழியக்கூடிய இன்பங்களைத் தியாகம் செய்ய வேண்

---

* இந்த சுலோகம் மிகவும் சிக்கல். இதற்கு சங்கராச்சாரியார் நான்கு விதத்தில் பொருள் சொல்லுகிருர். 'அனன்ய ப்ரோக்தே' என்பதை 'அன்யப்ரோக்தே விநா' என்று வைத்துக்கொண்டு, ஐந்தாவதாக ஒரு பொருளைச் சொல்லத் துணிந்தேன். வடமொழி இலக்கணமும் மரபும் உபநிஷத்து ஆக்கப்பட்ட காலத்தில் கொஞ்சம் மாறுபட்டு இருந்திருக்கலாம் என்ற சமாதானத்தின்பேரில் தான் இவ்வாறு பொருள் கூறத் துணிந்தேன்.

டும். அத்தகைய தியாகமே நித்தியப் பொருளை அடையும் வழி. ஆகையால் நான் நாசிகேத வேள்வித் தீயில் அநித்தியமான எல்லாப் பொருள்களையும் எரியவிட்டு அழிவிலா நிலையைப் பெற்றேன்.

எமன் வியக்தமாக இப்போது நாசிகேத வேள்வியை ஆத்மஞானமாகவே உரைத்து, இகத்தில் சுகம் தரும் பொருள்களையும் அவைகளால் அடையக் கூடிய அற்ப சுகங்களையும் இந்த ஞானத்தீயில் எரியவிட்டு, ஆத்மஞானம் பெற்றால் தான் விடுதலை அடையலாம் என்று கூறுகிறான். கீதை 4-வது அத்தியாயம் 23-வது முதல் 30-வது சுலோகம் வரை பார்க்க.

जानाम्यहं शेवधिरित्यनित्यं
न ह्यध्रुवैः प्राप्यते हि ध्रुवं तत् ।
ततो मया नाचिकेतश्चितोऽग्नि-
रनित्यैर्द्रव्यैः प्राप्तवानस्मि नित्यं ॥ १० ॥

## 11

"ஆத்மாவே மெய்ப்பொருள். அதற்குள்ளே தான் எல்லா ஆசைகளும் தீர்ந்து முடிவு பெறும். ஆகையால் உலகம் முழுதும் அந்த உண்மைப் பொருளின்மேல் நிற்கின்றது. வேள்விகளின் பிரயோஜனமும் முடிவில் அந்த மெய்ப் பொருளைப் பற்றியே நிற்கிறது. பிறப்பு இறப்பு என்ற அச்சந்தரும் பெருங் கடலுக்கு அக்கரை அதுவே ஆகும். அதுவே மதிக்கத் தக்க பெறும்பேறு. அனைத்தையும் தாண்டிய நிலை. உன்னுடைய அறிவின் பயனாக இதை நீ உணர்ந்து, உறுதிகொண்டு துறந்து நின்றாய்," என்று நசிகேதனை மெச்சிப் பேசுகிறான்.

"துறந்தாய்": அனைத்தையும், தன்னையுமே. பரமாத்மாவுக்கு அனைத்தையும் அர்ப்பணம் செய்துவிடுவதே துறவு. செயப்படு பொருள் இல்லாத துறத்தல், தன்னையும் உள்பட

அனைத்தையும் துறத்தலாகும். ஈசாவாஸ்ய உபநிஷத்திலும் முதல் சுலோகத்தில் இவ்வாறே, எதை என்று சொல்லாமல், “ துறந்து அநுபவிப்பாயாக ” என்று சொல்லப்படுகிறது.

कामस्याप्तिं जगतः प्रतिष्ठां
क्रतोरनन्त्यमभयस्य पारं।
स्तोमं महदुरुगायं प्रतिष्ठां दृष्ट्वा
धृत्या धीरो नचिकेतोऽत्यस्राक्षीः ॥ ११ ॥

## 12

மாறும் நிலைகளால் கலவரப்படாமல் எந்தப் பொருளின் மேல் முடிவில் சுகமும் துக்கமும் பற்றி நிற்கிறதோ அதை அறிந்தால், எல்லாச் சிக்கலும் விடுபட்டு ஞானம் உண்டாகும்.

“ பொருள்களுக்குள் புராதனமான பொருளான ஆத்மாவைக் காண்பது கடினம். அது இதயத்தினுள் வீற்றிருக்கிறது. வெறுக்கத்தக்க ஆசாபாசங்களும் துக்கங்களுக்கும் இடையில் மறைந்து கிடக்கிறது. இந்தப் புனிதப் பொருளை தியானத்தினால் அடைந்து கண்டு கொண்ட தீரன் சுகமும் துக்கமும் கடந்தவனுவான்.

ஆத்மாவின் உண்மை சொரூபத்தைத் தனக்குள் கண்ட பின் மகிழ்ச்சியும் துக்கமும் இரண்டும் அற்றுப்போகும். பரம் பொருளுக்கு நன்மை ஏது? தீமை ஏது? அதற்கு ஏற்றமும் கிடையாது. தாழ்வும் கிடையாது. அதைப் பெருக்கவும் முடியாது. குறைக்கவும் முடியாது. அந்தராத்மாவின் உண்மை சொரூபத்தைக் காண்பதே விடுதலைக்கு வழி.

பரம் பொருளைத் தனக்குள் காண்பது கடினம். புலன்களின் போக்குகளும் மனப்போக்குகளும், உணர்ச்சி, எண்ணம் பகுத்தறிவு, முதலியவையும் வேறு. அந்தராத்மா என்பது வேறு. அது மனோவேகங்கள் அனைத்துக்கும் பின்னால் நிற்கும் நுட்பமான தனிப்பொருள். அது உள்ளத்தினுள் மறைந்து

நிற்கிறது. நமது ஆசாபாசங்கள், சுக துக்கங்கள் இவைகளுள் மூடப்பட்டு, மறைந்து கிடக்கிறது. இவைகளினின்று வேறுபடுத்தி அதைக் காண்பது கடினம் சுபாவத்திலே புனிதமான அந்தப் பொருள் அநேக மாசுகளின் மத்தியில் தங்கி நிற்கிறது, அது ஆதி அந்தம் அற்ற பொருள். இதை அடையும் வழி யாது? மனதை ஒருமைப் படுத்திப் புலன்களை அடக்கி, புறப் பொருள்களினின்று உள் ளத்தை மீட்பதால் மனக்கண்ணைச் செலுத்தி உள்ளத்தில் வீற்றிருக்கும் பரம் பொருளைக் காணலாம். கண்டவுடன் இன்ப துன்பங்கள் மறைந்து போகும். அதுவே மோக்ஷம் அல்லது வீடு.

तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं
गुहाहितं गह्वरेष्ठं पुराणं ।
अध्यात्मयोगाधिगमेन देवं
मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥ १२ ॥

## 13

"ஆசாரியன் சொல்வதைக் கேட்டு மனதில் நன்ருகக் கிரகித்துக்கொண்டு நுட்பமான இந்த மெய்ப் பொருளைக் கண்டவன் பேரின்பத்தைப் பெறுகிருன். அந்த இன்பமே மெய்யின்பம். இந்த அழிவில்லாத ஆனந்த நிலையை நீ அடைவாய். உனக்காக, அரண்மனை வாயில் திறந்த வண்ணமாய்க் காத்திருக்கிறது.

நசிகேதனுடைய உள்ளம் பரம் பொருளை அடையவே உறுதிகொண்டு மற்ற ஆசைகளைத் துறந்து நின்றபடியால் அவனைப் பற்றி எமன் இவ்வாறு உறுதி கூறுகிருன்.

एतच्छ्रुत्वा संपरिगृह्य मर्त्यः
प्रवृह्य धर्म्यमणुमेतमाप्य ।
स मोदते मोदनीयं हि लब्ध्वा
विवृतं सद्म नचिकेतसं मन्ये ॥ १३ ॥

## 14

"தர்மம், அதர்மம் என்ற வேறுபாடுகள் இரண்டையும் தவிர்த்தால் எந்தப் பொருள் மிஞ்சுகிறது? செயல், செயலின்மை என்ற நிலைவேறுபாட்டை ஒழித்துப் பார்த்தால் என்ன மிஞ்சுகிறது? கழிந்ததும் வருவதுமான காலவேறுபாடுகளைத் தவிர்த்துப் பார்த்தால் எந்தப் பொருள் உனக்குத் தென்படுகிறது, சொல்லுவாயாக!

இவ்வாறு எமன் நசிகேதனைக் கேட்டு அந்தராத்மாவின் உண்மையை அவனுக்குப் புலப்படச் செய்கிறான். கேள்விகள் மூலம் உபதேசம் செய்யும் முறை. ஸ்ரீ சங்கராச்சாரியார் இந்த சுலோகம் நசிகேதன் சொன்னதாக வைத்து, அதாவது, எமனை நசிகேதன் இவ்வாறு கேட்பதாக வைத்துக்கொண்டால், நசிகேதன் முழுதும் உணர்ந்தே உபதேசம் கோருவதாக ஏற்படும்.

अन्यत्र धर्मादन्यत्राधर्मा-
दन्यत्रास्मात् कृताकृतात् ।
अन्यत्र भूताच्च भव्याच्च
यत्तत् पश्यसि तद् वद ॥ १४ ॥

## 15

எல்லா வேதங்களிலும் அடையத் தகுந்தது என்று எடுத்துக் காட்டப்படும் நிலை ஒன்று உண்டு. அந்த நிலையை அடையத்தான் எல்லா வகைத் தவங்களும் செய்யப்படுவன. பிரம்மசரிய விரதம் கொள்ளப்படுவதும் அதை அடையவே. அந்த நிலையை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன், கேள். அதுவே 'ஓம்' என்ற மந்திரத்தின் பொருளாகும்.

'ஓம்' என்பது யோக நிலையைக் குறிக்கும். வெறும் சொல் மாத்திரம் அல்ல. மனதை அடக்கி, புலன்களை

மறந்து, அறிவை உள்நோக்கிச் செலுத்தி, உயிரின் உணர்வு முழுதும் அந்தராத்மாவின் மேல் நிற்கச் செய்து அடையும் யோக நிலையே 'ஓம்' என்பது. பாரத நாட்டில் பரம் பொருளை நாடிய பெரியோர்கள் அனைவரும் பல்லாயிர ஆண்டுகளாக ஜபம் செய்து வந்த எழுத்து 'ஓம்' என்பது. 'ஓம்' என்று மனதை உள்நோக்கச் செய்து வழக்கப் படுத்தி வந்தால், வரவர அந்த ஜபமே உள்ளத்தை விஷய நினைவு களினின்று மீட்பதற்கு வழியாகும். இது பாரத நாட்டில் பெரியோர்கள் அனைவரும் அநுபவத்தின் பேரில் சொல்லுவ தாகும்.

सर्वे वेदा यत् पदमामनन्ति
तपांसि सर्वाणि च यद् वदन्ति ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति
तत् ते पदं संग्रहेण ब्रवीम्योमित्येतत् ॥ १५ ॥

## 16

"இந்த மொழியை வேதம் முழுதுமாக வைத்துக் கொள். இதுவே அழிவிலாத உயிர் நிலையைக் குறிக் கிறது. பிறப்பும் இறப்பும் அழிவும் இல்லாத இந்தப் பொருளை அறிந்து கொண்டபின், எதை வேண்டினும் அடையலாம்.

மனதை அடக்கி உள்ளத்தை ஒருமுகப் படுத்துவதே வேதம் ஓதுதலுக்கும் வேள்வி செய்வதற்கும் சமமாகும் என்றபடி. பகவத் கீதை 8-வது அத்தியாயம் 13-வது சுலோக மும் பார்க்க.

एतद्ध्येवाक्षरं ब्रह्म एतद्ध्येवाक्षरं परं ।
एतद्ध्येवाक्षरं ज्ञात्वा यो यदिच्छति तस्य तत् ॥ १६ ॥

17

"இந்த மந்திர மொழி ஜபத்தின் மூலம் பரம் பொருளைத் தியானித்தல் நல்ல முறையாகும். இதைப் பற்றிஞல் நற்கதி அடையலாம். இந்த மெய்ப்பொருளே உலகம் அனைத்துக்கும் ஆதாரம் என்கிற ஞானத்தை ஒருவன் அடைந்தால் மேலுலகம் அடைந்து மகிமை பெறுவான்.

ஆலம்பனம் என்கிற மொழிக்கு மூன்று இடத்தில் மூன்று விதமான பொருள்: அதாவது ஜபம் செய்தல், பற்றி நிற்றல், ஆதாரம், ஆகிய மூன்று,

एतदालम्बनं श्रेष्ठमेतदालम्बनं परं ।
एतदालम्बनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते ॥ १७ ॥

18

"உனக்குள் தங்கி நிற்கும் இந்தச் சேதனப்பொருள் புதிதாக உன்னுடன் பிறந்ததல்ல. அது என்றும் இருந்த பொருள். அது பிறப்பதுமில்லை, இறப்பது மில்லை. பிறப்பு,இறப்பு என்பவை அதைப்பற்றி நடை பெறும் நிகழ்ச்சிகள் அல்ல. வேறு ஒன்றிலிருந்து அது உண்டாகியதல்ல. முன் வேருக இருந்து வேற்றுமைப் பட்ட பொருளும் அல்ல. பிறப்பற்றது, என்றும் இருந் தது, என்றும் இருப்பது, அழிவற்றது. உடல் கொல்லப்பட்டாலும் அது கொல்லப்படாதது.

न जायते म्रियते वा विपश्चि-
न्नायं कुतश्चिन्न बभूव कश्चित् ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो
न हन्यते हन्यमाने शरीरे ॥ १८ ॥

## 19

"உடலைப் பொருந்திய விகாரங்கள் எதுவும் ஆத்மாவைத் தீண்டாது. ஒரு ஜீவனை வெட்டிக் கொல்லுகிறேன் என்று வெட்டுகிறவன் நினைப்பதும், செத்துப் போகிறேன் என்று அடிபடுகிறவன் நினைப்பதும் இரண்டும் அறியாமையால் உண்டாகும் எண்ணங்கள். ஆத்மா கொல்லுவதுமில்லை ; கொல்லப்படுவதுமில்லை.

பகவத்கீதையிலும் இவ்விஷயம் இதே மொழிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. மகாபாரதத்திற்கு முன்னதாக உண்டான கடோபநிஷத்திலும் மொழி மாற்றங்கூட இல்லாமல் இந்த உபதேசத்தைக் காண்கிறோம். ஆகையால் கொல்லுவதும் கொல்லப்படுவதும் வருத்தப்படவேண்டிய விஷயமல்ல என்று சொன்னது பாரதப் போரில் கலந்து கொள்ளுமாறு அருச்சுனனைத் தூண்டுவதற்காகவே கண்ணன் யுக்தியாகச் சொன்ன பேச்சு என்று எண்ணுவதற்கு இடம் இல்லை. கடோபநிஷத்துக் கதையில் இம்மாதிரியான யுத்த சந்தர்ப்பம் கிடையாது. மிகப்பழைய இந்த நூலில் அந்த உபதேசம் யுத்த சம்பந்தமில்லாமல் அடங்கி நிற்கிறது.

हन्ता चेन्मन्यते हन्तुं हतश्चेन्मन्यते हतं ।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥

## 20

"எந்த நுண்ணிய அணுவிலும் பரம் பொருள் இருக்குமாதலால் அது அணுவினும் நுட்பமானது. உலகத்தில் மிகப் பெரிய பொருள்களைவிட இப்பொருள் அதிகப் பெரிதாய் உள்ளது. இதுவன்றி அவைகளின் பெருமை ஒன்றுமில்லாமல் போகும். மக்கள் உள்ளத்திலும் இப்பொருள் வீற்றிருக்கிறது. வேறெங்கும் அவர்கள் போய்த் தேட வேண்டியதில்லை. ஆசைகளை

## 17

"இந்த மந்திர மொழி ஜபத்தின் மூலம் பரம் பொருளைத் தியானித்தல் நல்ல முறையாகும். இதைப் பற்றினல் நற்கதி அடையலாம். இந்த மெய்ப்பொருளே உலகம் அனைத்துக்கும் ஆதாரம் என்கிற ஞானத்தை ஒருவன் அடைந்தால் மேலுலகம் அடைந்து மகிமை பெறுவான்.

*ஆலம்பனம் என்கிற மொழிக்கு மூன்று இடத்தில் மூன்று விதமான பொருள்: அதாவது ஜபம் செய்தல், பற்றி நிற்றல், ஆதாரம், ஆகிய மூன்று,*

एतदालम्बनं श्रेष्ठमेतदालम्बनं परं ।
एतदालम्बनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते ॥ १७ ॥

## 18

"உனக்குள் தங்கி நிற்கும் இந்தச் சேதனப்பொருள் புதிதாக உன்னுடன் பிறந்ததல்ல. அது என்றும் இருந்த பொருள். அது பிறப்பதுமில்லை, இறப்பது மில்லை. பிறப்பு,இறப்பு என்பவை அதைப்பற்றி நடை பெறும் நிகழ்ச்சிகள் அல்ல. வேறு ஒன்றிலிருந்து அது உண்டாகியதல்ல. முன் வேருக இருந்து வேற்றுமைப் பட்ட பொருளும் அல்ல. பிறப்பற்றது, என்றும் இருந்தது, என்றும் இருப்பது, அழிவற்றது. உடல் கொல்லப்பட்டாலும் அது கொல்லப்படாதது.

न जायते म्रियते वा विपश्चि-
न्नायं कुतश्चिन्न बभूव कश्चित् ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो
न हन्यते हन्यमाने शरीरे ॥ १८ ॥

## 19

"உடலைப் பொருந்திய விகாரங்கள் எதுவும் ஆத்மாவைத் தீண்டாது. ஒரு ஜீவனை வெட்டிக் கொல்லுகிறேன் என்று வெட்டுகிறவன் நினைப்பதும், செத்துப் போகிறேன் என்று அடிபடுகிறவன் நினைப் பதும் இரண்டும் அறியாமையால் உண்டாகும் எண் ணங்கள். ஆத்மா கொல்லுவதுமில்லை ; கொல்லப்படு வதுமில்லை.

*பகவத்கீதையிலும் இவ்விஷயம் இதே மொழிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. மகாபாரதத்திற்கு முன்னதாக உண்டான கடோபநிஷத்திலும் மொழி மாற்றங்கூட இல்லா மல் இந்த உபதேசத்தைக் காண்கிறோம். ஆகையால் கொல்லுவதும் கொல்லப்படுவதும் வருத்தப்படவேண்டிய விஷயமல்ல என்று சொன்னது பாரதப் போரில் கலந்து கொள்ளுமாறு அருச்சுனனைத் தூண்டுவதற்காகவே கண்ணன் யுக்தியாகச் சொன்ன பேச்சு என்று எண்ணுவதற்கு இடம் இல்லை. கடோபநிஷத்துக் கதையில் இம்மாதிரியான யுத்த சந்தர்ப்பம் கிடையாது. மிகப்பழைய இந்த நூலில் அந்த உபதேசம் யுத்த சம்பந்தமில்லாமல் அடங்கி நிற்கிறது.*

हन्ता चेन्मन्यते हन्तुं हतश्चेन्मन्यते हतं ।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥

## 20

"எந்த நுண்ணிய அணுவிலும் பரம் பொருள் இருக்குமாதலால் அது அணுவினும் நுட்பமானது. உலகத்தில் மிகப் பெரிய பொருள்களைவிட இப்பொருள் அதிகப் பெரிதாய் உள்ளது. இதுவன்றி அவைகளின் பெருமை ஒன்றுமில்லாமல் போகும். மக்கள் உள்ளத் திலும் இப்பொருள் வீற்றிருக்கிறது. வேறெங்கும் அவர்கள் போய்த் தேட வேண்டியதில்லை. ஆசைகளை

அறவே ஒழித்து, புலன்களும் மனமும் அடங்கப் பெற்ருல் ஒருவன் தனக்குள் கிடக்கும் பரம் பொருளைக் காண்பான். அவ்வாறு ஆத்ம தரிசனத்தை அடைந்தவன் துக்கத்தைத் தாண்டி விடுதலை அடைந்தவனுவான்."

ஆசைகளை ஒழித்தால் புத்தியானது வெளியில் நிற்கும் விஷயங்களினின்று விடுபடுகிறது. அவ்வாறு விடுபட்டால் மனமும் புலன்களும் கலக்கமற்று நிற்கும். அந்நிலையில் பரம் பொருள் தனக்குள் இருப்பதையும் அதுவும் தானும் ஒன்றென்பதையும் தியானிப்பவன் உணர்கிருன். வேற்றுமை உணர்ச்சி நீங்கியதும் பயமும் துக்கமும் கரைந்து போகும். கீதை 2—64 பார்க்க.

अणोरणीयान् महतो महीयानात्मास्य जन्तोर्निहितो गुहायां ।
तमक्रतुः पश्यति वीतशोको धातुःप्रसादान्महिमानमात्मनः ॥ २० ॥

## 21

தியானிப்பவன் தனக்குத்தானே சொல்லிக் கொள்ள வேண்டியது :

"உட்கார்ந்தபடியே அந்தராத்மா வெகு தூரம் சஞ்சரிக்கிறது. படுத்தவாக்கிலே அது எங்கும் திரிந்து வருகிறது. இந்த மகத்துவம் பொருந்திய பொருளுக்கும் எனக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தத்தை யோசித்தால், என்னைத் தவிர வேறு யாருக்கு இப் பொருளை அறிந்து கண்டுகொள்ளும் பாக்கியம் உண்டு?'

எங்கும் சுற்றி அலைந்துங்கூட என் உள்ளத்தில் தங்கி நிற்கிருன் அல்லவா ? நான் அவனை அறியாவிடில் வேறு யார் எனக்குச் சொல்ல முடியும் ? தானே தான் காணுவிடின் வேறு யாதும் வழியில்லை என்றவாறு.

आसीनो दूरं व्रजति शयानो याति सर्वतः ।
कस्तं मदामदं देवं मदन्यो ज्ञातुमर्हति ॥ २१ ॥

## 22

"உடலின்றி தனிப்பட்டு நிற்கும் இந்தப் பொருள் உடலினுள் தங்கி நிற்கிறது. வேற்றுமையும் அழிவும் பொருந்திய பொருள்களுக்குள் இவ்வுறுதிப் பொருள் நிற்கிறது. இவ்வாறு எங்கும் பரவி நிற்கும் இப்பொருள் தனக்குள் இருப்பதையும், தானே அது என்பதையும் கண்டறிந்தவன் துயரம் நீத்தவன் ஆவான்.

*தனக்குள் நிற்பதை அறிந்த பின்னும் துயரம் தீராது. தானும் அதுவே, அதுவன்றி தான் வேறில்லை என்று அறிந்த பின்னரே துயரம் தீரும்.*

अशरीरं शरीरेष्वनवस्थेष्ववस्थितं ।
महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ २२ ॥

## 23

"வேதத்தைத் திரும்பத் திரும்ப ஓதி இந்த ஆத்மாவை அடைய முடியாது. படிப்பதால் உண்டான அறிவைக்கொண்டு ஆத்மதரிசனம் அடைய முடியாது. பண்டிதர்கள் சொல்லக் கேட்டும் இதை அடைய முடியாது. ஆத்ம ஞானம் வேண்டும் என்று தன் உள்ளத்தில் விருப்பம் ஓங்கப்பெற்றவனே ஆத்மாவைக் காணப்பெறுவான். அத்தகைய உள்ளம் கொண்டவனுக்குத்தான் அப்பொருளும் தன் உருவத்தைக் காட்டும்.*

---

*21-வது சுலோகத்தையும் 23-வது சுலோகத்தையும் சேர்ந்தாப்போல் ஆராய்ந்து படிக்க வேண்டும். இரண்டின் பொருளும் நெருங்கிய சம்பந்தம் கொண்டுள்ளது. 21-வது சுலோகத்திற்குப் பொருத்தமான பொருள் வெளிப்படையாகக் காணுது. 23-வது சுலோகத்துடன் சேர்த்துப் பார்த்து, 21-வது சுலோகத்திற்கு நான் கொடுத்திருக்கும் உரையை ஆராய வேண்டும்.

ஆத்மாவை அறிய வேண்டும் என்று உள்ளம் கரைந்து, அதைத் தவிர வேறு விருப்பங்கள் எல்லாம் ஒழிந்தால், மனம் சுத்தப்பட்டு விஷயப் பற்றுக்கள் தீர்ந்து, கலக்கம் அடங்கி, மயக்கங்கள் தீர்ந்து, யோக நிலை உண்டாகும். அவ்வாறு உள்ளத்தினின்று ஞான தாகம் கிளம்பாவிடின் படிப்பும் உபதேசமும் மூளைக்கு ஒரு பாரமாகுமே தவிர தரிசனம் தராது என்பது இதன் பொருள்.

नायमात्मा प्रवचनेन लभ्यो
न मेधया न बहुना श्रुतेन ।
यमेवैष वृणुते तेन लभ्य-
स्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वां ॥ २३ ॥

## 24

"தீய நடத்தைகளினின்று விலகாதவன், புலன்கள் அடங்கப் பெறாதவன், மனதிலுங்கூட விஷய நினைவுகள் நீங்கி அமைதியும் ஒருமுக கவனமும் அடையாதவன், உள்ளத்தில் சாந்தி பெறாதவன், பரம்பொருளைத் தனக்குள் அறிவின் பலத்தைக் கொண்டு காண முடியாது.

இவ்விடத்தில் ஒரு ஐயம் தோன்றும். முன் நிற்கும் மலையைப் பார்க்கக் கண் வேண்டும். திருடன், யோக்யன், இருவருக்கும் அது காணப்படும், ஆகையால் உண்மையைப் பார்க்கச் சீலம் வேண்டியதில்லையே? ஆத்மாவின் சொரூபத்தை அறிய சீலம் ஏன் வேண்டும்? உண்மை அறிவதற்கு நன்னடத்தையும் புலன் அடக்கமும் என்னத்திற்கு? அறிவுக்கு வேண்டியது ஆசாரியர் உதவியும் படிப்புமே அல்லவா? இவை இருந்தால் மற்றக் குற்றங்கள் என்ன செய்யும்? இந்த கேள்விகளுக்கு விடை: ஆத்மா இருப்பது உள்ளத்திற்குள். உள்ளம் தெளிவு அடைந்தாலொழிய அதற்குள் கலந்து மறைந்திருக்கும் பொருள் வெளிப்படாது. வெளியில் நிற்கும்

பொருளைப் பார்க்கும் முறை வேறு. தனக்குள் ஊடுருவி நிற்கும் பொருளைக் காணப் பெறும் முறை வேறு. உள்ளம் தெளிந்தாலொழிய உள்ளத்தினுள் நிற்கும் பொருள் காணப் படாது. மனம் தெளிவுபடுவதற்குச் சீலமும் பற்றற்ற நிலை யும் வேண்டும். உடலுக்கு உயிர் எவ்வாறோ அவ்வாறு உயி ருக்குப் பரம் பொருள். இதைக் காண்பதற்கு இந்த சுலோகத் தில் சொல்லப்பட்ட சீலமும் சாந்தமும் தியானமும் வேண் டும். இதுவே வேதாந்தத்தின் முக்கிய தத்துவம் என்று சொல்லலாம்.

இந்த உண்மையை நன்கு ஆராய்ந்தால் ஞான மார்க்கம். பக்தி மார்க்கம், கர்ம மார்க்கம் என்று மூன்றாகப் பிரிக்கப் பட்ட முறைகள் ஒன்றே என்பது விளக்கமாகும்.

नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः ।
नाशान्तमानसो वापि प्रज्ञानेनैनमाप्नुयात् ॥ २४ ॥

## 25

"நாம் ஆராயும் பொருளுக்கு அறிவு நிறைந்த பிரம்ம குலமும் வீரம் பொருந்திய க்ஷத்திரிய மூலமும் இரண்டும் உண்ணும் சோறு போலாகும். மக்களை நடுங்கச் செய்யும் மரணம், சோற்றுக்குச் சேர்த்துக் கொள்ளும் காய்கறி போலாகும். இத்தகைய சோறும் கறியும் உண்ணும் மகத்தான ஒரு பொருளைப்பற்றி, அது என்ன வடிவம், என்ன இடம் என்பதை ஒருவன் எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்?"

ஆத்மா என்ற நாம் காண விரும்பும் இந்தப் பொருள், கல்வி கற்ற பிராம்மணன் உடலிலும்,வீரம் பொருந்திய க்ஷத்தி ரியன் உடலிலும் தங்கி அதன் மூலம் அவர்கள் வாழ்க்கை முழுதையும் தனக்கு அன்னமாக உட்கொள்ளுகிறது. அவர் கள் செய்த கர்மங்களால் ஆத்மாவானது அடுத்த உடலைச் சம்பாதிக்கிறது. உட்கொள்ளும் அன்னம் தேகமாகிறது. தேகத்திற்கு அன்னம் எவ்வாறோ அவ்வாறு ஆத்மாவுக்குக்

கருமங்கள். ஒருவன் செய்யும் கருமங்களாலே அடுத்தபடி அவனுடைய ஆத்மா சென்றிருக்க வேண்டிய உடல் நிருமாணிக்கப்படுகிறது. ஆகையால் மனிதனுடைய வாழ்க்கைக் கருமங்களை ஆத்மாவுக்கு அன்னமாக வைத்துக்கொள்ளலாம். அனைவரும் அஞ்சும் மரணமே இந்த ஆத்மாவுக்கு அன்னத்தின்கூடச் சேர்த்துக்கொள்ளும் ரஸம், குழம்பு போல் "உபஸேசன"ப் பொருள் ஆகிறது. ஓர் உடலினின்று வேறு உடலுக்குப் போக, மரணம் என்பது உதவுகிறது. ஆகையால், உடலாகிய அன்னத்திற்கு மரணம் கறிபோல் வைக்கப்பட்டது. ஜன்மங்களே அன்னம், மரணமே அதைப் புசிக்கும் போது சேர்த்துக் கொள்ளவேண்டிய உதவி ஆகாரம்.

இவ்வாறு மகத்துவம் பொருந்திய பொருளாகும் இந்த ஆத்மா. அதைக் காணவேண்டுமென்றால் முன் சுலோகத்தில் சொல்லியவாறு சீலமும் சாந்தமும் யோகமும் வேண்டும். இல்லாவிடில் மறைந்தே நிற்கும்.

यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः ।
मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः ॥ २५ ॥

## மூன்றும் அத்தியாயம்

# புலனடக்கத்தைப்பற்றிய உபதேசம்

## 1

"வெயிலும் நிழலும்போல் கூட இருந்துகொண்டு இதய குகையில், அதாவது உள்ளத்தின் அந்தரங்கத்தில் நற்கருமங்களின் பலன்களை இரண்டும் (ஜீவாத்மாவும் பரமாத்மாவும்) அருந்திக்கொண்டு வீற்றிருக்கின்றன. வேதம் ஓதுபவர்களும் ஐந்து வேள்வித்தீ ஓம்புகிறவர்களும் மூவேள்வித்தீ ஓம்புகிறவர்களும் இவ்வாறே சொல்லுகிறார்கள்.

'ஐந்தீ ஓம்புகிறவர்கள்,' 'மூவேள்விக்காரர்,' 'வேதம் ஓதுபவர்' இப்பெயர்கள் உபநிஷத்து ஆக்கிய காலத்தில் நித்திய முறைகளிலும் கொள்கைகளிலும் இருந்த வேறுபட்ட சம்பிரதாயங்களைக் குறிக்கின்றன. எடுத்துச் சொல்லப்படும் விஷயத்தில் இவர்கள் அனைவரும் ஒரே அபிப்பிராயம் கொண்டவர்கள் என்று காட்டப்படுகிறது.

இரண்டும் என்பது ஜீவாத்மாவும் பரமாத்மாவும். நிழலும் வெயிலும் போல என்று உவமை கூறப்படுகிறது. ஆத்மா என்று இதுவரையில் ஒருமையாகச் சொல்லப்பட்டு, இங்கே இரண்டாகச் சொல்லப்படுவதன் காரணம் சீடன் மனதில் தோன்றும் சந்தேகத்தைத் தீர்க்கவே. உலகத்திற்கே ஈசனாக நிற்கும் பொருளையும் மிகச் சிறியதான 'நான்' என்கிற பொருளையும் எவ்வாறு ஒன்றாக வைக்க முடியும்? இந்தக் கேள்வி கிளம்புகிறது. வெயிலுக்கும் நிழலுக்கும்

உள்ள சம்பந்தம் போல் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது விடை. பரமாத்மா வெயில். அது எங்கும் பரவி நிற்கும் ஜோதிப்பொருள். அதுவே உண்மைப் பொருள். வெயிலின் வழியில் நிற்கும் பொருள் நிழலை உண்டாக்குகிறது. வெயிலுக்கு ஏற்பட்ட தடை அல்லது குறையே நிழலின் வடிவத்தை உண்டாக்குகிறது. வெயிலுக்கு வடிவம் இல்லை. நிழலுக்கு வடிவம் உண்டு. ஆனால் வெயிலே ஒளிப்பொருள். ஒளியின் குறைக்கு நிழல் என்று பெயர். வெயில் வேறு, நிழல் வேறு அல்ல. தடைப்பட்ட வெயிலே நிழல் ஆகிறது. ஒரு குறையும் தடையுமின்றி நின்றால், வெயில் சமப் பிரகாசத்துடன் நிற்கிறது. தடைப்பட்ட இடத்தில் நிழல் தோன்றுகிறது, இவ்வாறே ஜீவாத்மா பரமாத்மாவின் நிழலாகும். தனிப்பொருளாகத் தோன்றினும் உண்மையில் அவ்வாறு அல்ல. தடையை நீக்கியவுடன் நிழலும் வெயிலும் ஒன்றாகி விடும். மனிதனுடைய கர்ம பலன்களாகிய குணவிகாரங்கள் நிழலை ஆக்குகின்றன. பரமாத்மாவின் உண்மைச் சொரூபம் மறைந்து, நிழல் மாதிரி வியக்தி உணர்ச்சி உண்டாக்குகிறது. ஆனால் நிழலுக்கு உயிர் வெயில்தான். அந்த நிழலைத்தான் ஜீவாத்மா என்று வைத்துக்கொண்டு பேசுவது.

சேதன உள்ளமே பரமன் கோயில். அதைத்தான் உபநிஷத்துகளில் "குகை" என்று பல இடங்களில் சொல்லுவது. இக்குகையில் "இரண்டும்" இருக்கின்றன என்று சொன்னதின் நோக்கம் விஷயத்தை விளக்குவதற்காக. அறியாமை நீங்கி ஞானம் உதித்தவுடன் இரண்டும் ஒன்றாகும். அது வரையில் இரண்டும் வேறாக நிற்கும். இரண்டும் பிணைந்து நிற்பதைக் காட்டுவதற்காக இரண்டும் ஒரே குகையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

மூன்றாவது முண்டக உபநிஷத்து முதல் காண்டத்தில் இரண்டு பறவைகள் ஒரே மரத்தில் இருப்பதாகவும், ஒன்று பழத்தைத் தின்பதாகவும், மற்றொன்று சும்மா பார்த்துக் கொண்டிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. பழத்தைத் தின்னும் பறவை ஜீவாத்மாவைக் குறிக்கிறது. சும்மா

பார்த்துக் கொண்டிருக்கிற பறவை சாக்ஷி என்று சொல்லப் படும் பரமாத்மாவைக் குறிக்கிறது. பழம் என்பது கருமங் களின் பலன்.

ऋतं पिबन्तौ सुकृतस्य लोके
गुहां प्रविष्टौ परमे परार्धे ।
छायातपौ ब्रह्मविदो वदन्ति
पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः ॥ १ ॥

## 2

"வேள்விகளைச் செய்பவர்கள் [வேள்விகளின் மூலம் மரண பயத்தையும் வாழ்க்கைத் துயரங்களை யும் தாண்டிவிடலாம் என்று கருதுகிறார்கள். ஆனால் ஆத்ம ஞானமே மரண ஜன்மங்களைத் தாண்டும் பாலம் என்று நான் சொல்லுவேன்*.

यः सेतुरीजानानामक्षरं ब्रह्म यत् परं ।
अभयं तितीर्षतां पारं नाचिकेतं शकेमहि ॥ २ ॥

## 3—6

"உடலை ஒரு வண்டியாகவும் ஆத்மாவே வண்டி யில் செல்லும் எஜமானனுகவும், புத்தியே வண்டியை ஓட்டும் ஆளாகவும், மனமே குதிரைகளின் கடிவாளக் கயிருகவும் அறிவாயாக. ஐம்பொறிகளைக் குதிரை களாகவும் அப்பொறிகளுக்குரிய விஷயங்களை வண்டி செல்லும் பாதையாகவும் ஒப்பிட்டுச் சொல்லலாம்.

வண்டியில் செல்லும் எஜமானனை ஆத்மா இவ்வத்தி யாயத்து முதல் சுலோகத்தில் கர்ம பலன் உண்ணும் ஆத்மா என்று சொல்லப்பட்டது.

---

* இவ்விடத்தில் நாசிகேதம் என்றால் ஆத்ம ஞானம் என்றே தோன்றுகிறது. இந்த அத்தியாயத்தில் மறுபடியும் வேள்வியைப்பற்றிச் சொல்ல யாதொரு காரணமுமில்லை.

"ஆத்மாவும் புலன்களும் மனதும் ஒன்ருகி நின்று வாழ்க்கை அனுபவம் பெறுகின்றது.

"நல்லறிவு பெருதவன் கடிவாளக் கயிருகிய மனதைச் சரியாகப் பிடிக்கமாட்டான். அதாவது, குதிரைகளாகிய புலன்களைக் கவனத்துடன் நடத்தமாட்டான். போக்கிரிக் குதிரைகளைப் பூட்டிய வண்டியைப் போல் வாழ்க்கை நடைபெறும்.

"நல்லறிவு பெற்றவன், மனம் என்ற கடிவாளத்தை சரியாகப் பிடித்து, நல்ல குதிரைகளை நல்ல சாரதி நடத்துவதுபோல் புலன்களை அடக்கி, விஷயங்களுக்கு இடையில் உடலை நடத்துவான்.

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु ।
बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च ॥ ३ ॥
इन्द्रियाणि हयानाहुर्विषयांस्तेषु गोचरान् ।
आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनीषिणः ॥ ४ ॥
यस्त्वविज्ञानवान् भवत्ययुक्तेन मनसा सदा ।
तस्येन्द्रियाण्यवश्यानि दुष्टाश्वा इव सारथेः ॥ ५ ॥
यस्तु विज्ञानवान् भवति युक्तेन मनसा सदा ।
तस्येन्द्रियाणि वश्यानि सदश्वा इव सारथेः ॥ ६ ॥

## 7

"பகுத்தறிவற்றவன் மனதை அடக்கியாளாமல், எப்பொழுதும் மாசு பொருந்தியவனுகிருன். அவன் சேரவேண்டிய இடத்தைச் சேரமாட்டான். பரமபதம் போய்ச் சேருவதற்குப் பதில் ஸம்ஸாரத்தில் சுற்றிச் சுற்றி அலைவான்.

*ஸம்ஸாரம் என்ருல் பிறப்பும் இறப்பும் அதனிடையில் துக்கங்களுமாகிய முடிவிலாச் சுழல்.*

यस्त्वविज्ञानवान् भवत्यमनस्कः सदाऽशुचिः ।
न स तत् पदमाप्नोति संसारं चाधिगच्छति ॥ ७ ॥

8

"சரியாக ஓட்டிய ரதம் ஊர்போய்ச் சேர்வது போல், பகுத்தறிவு படைத்தவன் இடைவிடாத கவனத்துடன் மனதை அடக்கி உள்ளும் புறமும் சுத்தமாக நின்று, சீலத்தைக் காப்பாற்றிக்கொண்டு நித்தியமான பரமபதம் அடைவான்.

यस्तु विज्ञानवान् भवति समनस्कः सदा शुचिः ।
स तु तत् पदमाप्नोति यस्माद् भूयो न जायते ॥ ८ ॥

9

"நல்லறிவு என்ற சாரதியைப் பெற்றவன், அச் சாரதியைக் கொண்டு கடிவாளக் கயிருன மனதைச் சரியாகப் பிடித்துப் புலன்களை நடத்திப் பிரயாணத்தின் முடிவு, அதாவது விஷ்ணுபதம் என்ற பரமபதம் அடைவான்.

இரண்டாவது அத்தியாயம் 24-வது சுலோகத்தில் தனக்குள்ளே வீற்றிருக்கும் பரம் பொருளை மனிதன் கண்டுகொண்டு பரம பதம் அடைய வேண்டுமானுல் புலனடக்கம் இன்றியமையாதது என்று சொல்லப்பட்டது. இப்புலனடக்கம் என்னத்திற்கு, அதை எவ்வாறு பெறலாம் என்பது வண்டி ஓட்டும் உபமானத்தால் இந்த சுலோகத்தில் விளக்கப்பட்டது.

ஆயினும் இது உபமானமே யொழிய, பரமாத்மாவை அடைவது என்ருல், ஒரு ஊரிலிருந்து வண்டியிலேறி அல்லது நடந்து போய்ச் சேருவது போல் அல்ல. அது அந்தராத்மாவும் தானும் ஒன்று என்ற ஞானம் உண்டாகி, வெயிலும் நிழலும் ஒன்ருகுதல் போல் உண்மையை அடைதல்.

வரும் இரண்டு சுலோகங்களில் சுருக்கமாகப் புலன்களினின்று பரமாத்மா வரையில் உயிரின் அமைப்பு சொல்லப்படுகிறது.

विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान् नरः ।
सोऽध्वनः पारमाप्नोति तद् विष्णोः परमं पदम् ॥ ९ ॥

## 10—11

"ஐம்புலன்கள்; அதன் மேல் அப்புலன்களின் வழிச் செல்லும் விஷய உணர்ச்சிகள்; அதன்மேல் அவ் வுணர்ச்சிகளைக் கொள்ளும் மனம்; அதன்மேல் மனத் தில் பின்னால் நின்று அதை நடத்தும் புத்தி; அதற்கும் மேல் 'நான்' என்ற தனிவியக்தி உணர்ச்சியுடன் நிற் கும் ஆத்மா (இதற்கு 'மகத்' என்று பெயர்). அதைத் தாண்டிநிற்பதும் அதற்குக் காரணமுமான அவ்யக்தப் பிரம்மம். அதற்கும் ஆதாரமாக நிற்பது புருஷோத் தமன். அவனுக்கு மேல் ஒன்றுமில்லை அவனே பரம்பொருள், அவனை அடைவதே வீடு அல்லது மோக்ஷம்.

इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान् परः ॥ १० ॥
महतः परमव्यक्तमव्यक्तात् पुरुषः परः ।
पुरुषान्न परं किंचित् सा काष्ठा सा परा गतिः ॥ ११ ॥

யோகமுறை என்ன என்பது இனி சொல்லப்படும்.

## 12

"இவ்வாறு எல்லா உயிர்களிலும் மறைந்து நிற் கும் அந்தராத்மாவை எல்லாரும் காணமுடியாது. சிலரேயோகத்தால் காண்பார்கள். நுண்ணிய அறிவும் ஒன்றுபட்ட கவனமும் செலுத்தி சூக்ஷ்ம தரிசிகள் தங்களுக்குள் வீற்றிருக்கும் பரமாத்மாவைக் காண் பார்கள்.

एष सर्वेषु भूतेषु गूढोऽऽत्मा न प्रकाशते ।
दृश्यते त्वग्र्यया बुद्धया सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥ १२ ॥

## 13

''ஞானம் படைத்தவன் பேச்சை மனத்தினுள் அடக்கி, பிறகு தன் உள்ளத்தையும் ஆத்மாவினில் அடங்கச் செய்து, அதற்குப் பின் 'தான்' என்கிற உணர்ச்சியையுங்கூட அகில விசுவத்தின் ஆத்மாவினுள் மறையச் செய்து விகற்பமற்ற சாந்த சொரூபமான அந்தராத்மாவை அடைவான்.

படிப்படியாக ஒன்றை மற்றொன்றில் அமரச் செய்து முடிவில் வேற்றுமை உணர்ச்சியை நீத்தலே யோகமுறை. அது இங்கே சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

यच्छेद् वाङ्मनसी प्राज्ञस्तद् यच्छेज्ज्ञान आत्मनि ।
ज्ञानमात्मनि महति नियच्छेत् तद् यच्छेच्छान्त आत्मनि ॥१३॥

## 14

வேற்றுமை உணர்ச்சியே மாயை. உண்மையில் பரனே உள்ளத்திலிருக்க, ஏன் அதை நாம் அறியவில்லை? ஒளியே நிழலாகத் தோன்றுவது போல், பரமாத்மாவே மாசுகள் பொருந்திய நம்முடைய உள்ளமாகிறது. இதைத்தான் மாயை என்று சொல்லுவது.

இந்த நிலை தூக்கத்திற்குச் சமானமானது. அஞ்ஞானம் என்ற இந்தத் தூக்கத்தினின்று விழித்தெழுந்து குறையும் முடிவும் இல்லாத மகிழ்ச்சியை அடையச் சொல்லி இந்த சுலோகம் கூவுகிறது. சுலோகத்தின் பொருள் :—

"எழு! எழு! தூக்கத்தை விட்டு எழு! மேலோரை அணுகி கவனத்துடன் உபதேசம் கேட்டு ஞானம் பெறுவாயாக. தீட்டிய கத்திமுனைமேல் நடப்பது போல் யோகமார்க்கம் மிகவும் கடினம் என்று அறிந்தோர் சொல்லுவார்கள். அதாவது மிகக் கவனமாக உள்ளத்தை காத்துக்கொள்ள வேண்டும்.

இரவில் கனவு ஒன்று கண்டு அதில் தோன்றும் சம்பவங்களினுல் துக்கப்படும் ஒருவனுக்கு என்ன நிவாரணம்? தூக்கத்திலிருந்து விழித்து எழுந்து, கனவைக் கனவென்று காண்பதே நிவாரணமாகும். அதுபோல் ஆத்மாவைப் பிடித்துள்ள வேற்றுமை உணர்ச்சியினின்று விழித்தெழுந்து, துக்கங்களினின்று விடுவித்துக் கொள்வாயாக, என்று உபநிஷத்து உபதேசிக்கிறது.

வேற்றுமை உணர்ச்சியை நீக்கும் அறிவின் தன்மையைப் பற்றி ஒரு சொல்.

"எனது உள்ளத்தில் பரன் கோயில் கொண்டிருக்கிறுன்" என்ற அறிவு, அடுத்த அறையில் சுப்பன் இருக்கிறுன் என்று சொல்லக்கேட்டு விஷயத்தை அறிந்துகொள்வது போல். அல்ல. தூக்கத்தினின்று விழிப்பது போல் நிலேயே முற்றும் மாறவேண்டும். தூக்கத்தினின்று விழிப்பதோ சுலபம். ஆனுல் சம்ஸார மாயை என்ற தூக்கத்தினின்று விழிப்பது அதைப் போல் எளிதல்ல. முதலாவது விழிக்க வேண்டும் என்கிற விருப்பம் உள்ளத்தில் பொங்கவேண்டும், இரண்டாவதாக கத்திமுனேமேல் நடப்பதுபோல், இடைவிடாத ஜாக்கிரதையுடன், புலன்களேயும் மனதையும் அடக்கிச் சீலத்தைக் காப்பாற்றி மனதையும் மாசற நிறுத்தி வேற்றுமை உணர்ச்சியை அறவே நீக்கவேண்டும். இதுவே யோகம் என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுவது.

उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान् निबोधत ।
क्षुरस्य धारा निशिता दुरत्यया दुर्गं पथस्तत् कवयो वदन्ति ॥ १४॥

## 15

இறப்பினின்று தப்புவதற்கு, அதாவது சம்ஸாரசாகரத்தினின்று விடுதலே பெறுவதற்கு, அடைய வேண்டிய அறிவு, ஆத்மாவின் சொரூபத்தைப்பறறிய நிச்சய ஞானம்.

'ஆத்மாவானது ஐம்புலன்களுக்கு எட்டாது. அது நாற்றம், சப்தம், தீண்டல், காட்சி இவ்வழிகளால் புலப்படாது. அது அழிவற்ற பொருள்,

என்றும் உளது; ஆதியந்தமற்றது. தனி உயிராகத் தோற்றம் கொடுக்கும் 'நான்' என்ற சேதனத்தையும் தாண்டிய பரம் பொருள். உயிருக்கு உயிராகிய இதைக் கண்டவனே மரணத்தை வென்றவனுவான்."

अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् ।
अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचाय्य तन्मृत्युमुखात् प्रमुच्यते ॥ १५ ॥

## 16—17

எமனுடைய உபதேசம் அடங்கிய இந்த நசிகேத உபாக்யானத்தைச் சொல்லியும் கேட்டும் அறிவு அடைந்தவர்கள் பிரம்மபதம் அடைவார்கள். வேதம் ஓதியவர்கள் சபையிலாவது தாய் தகப்பன்மார்களுக்குச் செய்யும் சிராத்தங்களிலாவது மறைந்து நிற்கும்

---

* இவ்வாறு பலனை எடுத்துக்காட்டும் சுலோகம் நூல்களின் முடிவில் வரும். இந்த சுலோகம் மூன்றுவது அத்தியாயத்தின் முடிவில் வருகிறபடியால் சிலர் இந்த உபநிஷத்தின் உருவம் எக்காரணமாகவோ முதலில் ஆக்கப்பட்டவாறு தற்போது இல்லை என்று எண்ணுகிறுர்கள், மூன்றுவது அத்தியாயமே முடிவாக இருந்து, நாலு, ஐந்து, ஆறு இந்த அத்தியாயங்கள் பின்னுல் சேர்க்கப்பட்டதாயிருக்கலாம் என்று ஊகிக்கிறுர்கள். அப்படி யல்லாமல் மூன்றுவது அத்தியாயமே பின்னுல் சேர்க்கப் பட்டதாயுமிருக்கலாம். புதிதாகச் சேர்க்கப் பட்டதை ஊர்ஜிதப்படுத்த இந்த சுலோகத்தை எழுதியும்

பரம் பொருளைப்பற்றிய இந்த உபதேசத்தை எடுத்தோதச் செய்தவனும் உயர்ந்த பதவி அடைவான்.*

नाचिकेतमुपाख्यानं मृत्युप्रोक्तं सनातनम् ।
उक्त्वा श्रुत्वा च मेधावी ब्रह्मलोके महीयते ॥ १६ ॥
य इमं परमं गुह्यं श्रावयेत् ब्रह्मसंसदि ।
प्रयतः श्राद्धकाले वा तदानन्त्याय कल्पते ॥ तदानन्त्याय कल्पत इति ॥ १७ ॥

---

இருக்கலாம். ஆறு அத்தியாயங்களும் ஒரே ரிஷியினால் ஆக்கப்பட்டவையானாலும் சரி, அல்லது பல ரிஷிகள் வெவ்வேறு காலங்களில் ஆக்கியவையாயினும் சரி, மிகவும் புராதனமானதும் சிரவண பரம்பரையாக வந்து அழிந்து போகாமல் நின்று எல்லாராலும் மதிக்கப்பட்டதுமான இந்த நூலைப்பற்றி இத்தகைய ஐயங்களை இப்போது கிளப்பி நாம் கலவரப்பட வேண்டியதில்லை.

நாலாவது அத்தியாயம்

# உள்ளமே பரமன் கோயில்

## 1

அநாதியான பரம்பொருளினின்று மாயையின் பலனைகப் பலவேறு வகை உயிர்கள் உண்டாயின. வளரும் செடியி லிருந்து இலைகள் துளிர்ப்பதுபோல் உள்ளிருந்து வெளி நோக் கித் தோண்டிச் செல்லும் சக்தியினுல் காது கண் முதலியன அமைந்தன. இவ்வாறு தம் தோற்றத்தின் காரணமாகவே புலன்கள் வெளியே நோக்கும் தன்மையை இந்திரியங்கள் அடைந்திருக்கிறபடியால் வெளி விஷயங்களையே உணர்கின் றன. உள் நோக்கி அந்தராத்மாவை உணரும் சக்தியை அவை பெறவில்லை. ஆயினும் வெகு சில அறிவாளிகள் சுபாவத்தை மீறி இறவாமையை வேண்டித் தங்கள் அறிவை உள் நோக்கச் செய்து அந்தராத்மாவைக் காண்கிறுர்கள்.

பரம்பொருளின் சக்தியினுல் பிரகிருதிப் பொருளி னின்று இந்திரியங்கள் உண்டாயின. உள்ளிருந்து வெளிநோக்கிச் செல்லும் சக்தியால் அமையப்பெற்ற புலன்கள் வெளி நோக்குகின்றன. பக்குவம் அடைந்த ஒரு சிலர்தான் சுபாவத்தை வென்று உள் நோக்கிப் பார்ப்பார்கள்.

पराञ्चि खानि व्यतृणत् स्वयम्भु-
स्तस्मात् पराङ् पश्यति नान्तरात्मन् ।
कश्चिद् धीरः प्रत्यगात्मानमैक्ष-
दावृत्तचक्षुरमृतत्वमिच्छन् ॥ १ ॥

2

அறியாமையில் மூழ்கி நிற்பவர்கள் புறப் பொருள் களை விரும்பி, அப்பொருள்களையே தொடர்ந்து செல் வார்கள். தொடர்ந்து சென்று எங்கும் பரந்து நிற் கும் காலன் பாசத்தில் சிக்கிக் கொள்வார்கள். மன உறுதியும் அறிவும் அடைந்தவர்கள் ஆத்மாவின் இறவாமையை அறிந்து அழியும் பொருள்களுக்கு இடையில் அடையக்கூடிய அழியும் இன்பத்தை விரும்பவே மாட்டார்கள்.

அறியாமையால் தூண்டப்பட்டு அநித்ய சுகங்களை அடையவிரும்புகிறோம். அதற்காகப் பல வினைகள் செய்கிறோம். விரும்பிய சுகங்களை அடையாததால், அல்லது அடைந்து இழந்ததால் கோபம், துவேஷம், துக்கம், இவைகளை உண் டாக்கிக் கொள்கிறோம். இதனால் முன்னைவிட அதிக அறி யாமை விளைகிறது ; அறியாமை அதிகரித்ததும் முன்னைவிட அதிகமாக 'தான்' என்கிற அகங்காரமும் 'தனது' 'தனக்கு' என்ற பொருட்பற்றும் ஆசையும் வேற்றுமை உணர்ச்சியும் உண்டாகும். இவ்வாறு வர வர உண்மையினின்று விலகி வெகுதூரம் செல்வோம். அப்படிச் செல்லாமல் உண்மையை வர வர அணுகுவதே விடுதலை மார்க்கம். அதற்கு உள்ள மாகிய கோயிலிலிருக்கும் பரம்பொருளை தியானித்தல் அவசியம்.

पराच: कामाननुयन्ति बाला-
स्ते मृत्योर्यन्ति विततस्य पाशम् ।
अथ धीरा अमृतत्वं विदित्वा
ध्रुवमध्रुवेष्विह न प्रार्थयन्ते ॥ २ ॥

3

பொருள்களைக் காண்பது எது ? கண்கள் என்று எண்ணலாம். அப்படி அல்ல. உள்ளே தனி ஒரு பொருள் கண்களின் வழியாகக் காட்சி அடை கிறது. அத் தனிப் பொருளே காதின் வழியாக

ஒலியை அடைகிறது. இவ்வாறே மற்றப் புலன்களும். ஆராய்ந்து பார்த்தால் கருவியாகிய புலனையும் அதனால் உண்டாகும் உணர்ச்சியையும் தவிர்த்து ஒரு பொருள் எஜமானனாக மிஞ்சுகிறது அல்லவா? அதுவே நாம் ஆராயும் பொருள் என்று வைத்துக்கொள்.

*படிப்படியாக உபதேசம் தரப்படுகிறது. புலனுக்குப் பின் நிற்கும் மனமே பரம் பொருள் என்று எண்ணி விடக் கூடும். இதற்கு அடுத்த சுலோகம் விடை தரும்.*

येन रूपं रसं गन्धं शब्दान् स्पर्शांश्च मैथुनान् ।
एतेनैव विजानाति किमत्र परिशिष्यते ।
एतद् वै तत् ॥ ३ ॥

4

மனிதன் விழித்தும் தூங்கியும் இருப்பான். விழித்தபோதும் தூங்கும்போதும் கண்டு, கேட்டு, தொட்டு அடைந்த விஷய உணர்ச்சிகள் எந்தப் பொருளின் மேல் தங்கித் தொடர்ச்சியறுமல் நிற்கின்றன ? இந்த இடையறு உணர்ச்சிக்கு எது ஸ்தானம்? அந்தச் சேதனப் பொருளே ஆன்மா, அது வேற்றுமை அற்றது. உறுதியான அறிவு படைத்தவன் இதை அறிவான். அறிந்து, வேற்றுமைகளால் உண்டாகும் துக்கத்தை நீப்பான்.

स्वप्नान्तं जागरितान्तं चोभौ येनानुपश्यति ।
महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ ४ ॥

5

இவ்வாறு இன்பங்களை அருந்திக் கொண்டு உள்ளத்தில் வீற்றிருக்கும் ஆன்மா நிகழ்ந்தன வருவன ஆகிய எல்லாவற்றிற்கும் எஜமானன். இதை அறிந்து மனிதன் யாதொரு பயமும் கவலையுமில்லாமல்

நிற்பான். அந்த நிலையில் பரம்பொருளைக் காணப் பெறலாம்.

य इमं मध्वदं वेद आत्मानं जीवमन्तिकात् ।
ईशानं भूतभव्यस्य न ततो विजुगुप्सते ।
एतद् वै तत् ॥ ५ ॥

நிகழ்ந்ததற்கும் வருவதற்கும் எஜமானன் என்றால், எல்லா சுகமும் துக்கமும் முடிவில் ஆத்மா அடையும் நிலையே தவிர வேறில்லை என்பது. எவ்வித வியாதிக் கிருமிகள் வந்து தாக்கி உள்ளே புகுந்தாலும் ஆரோக்கிய நிலையில் நிற்கும் தேகம் அவைகளால் பீடிக்கப்படமாட்டாது. தன் ஆரோக்கியத்திற்குத் தானே எஜமானனாகி தேகம் நிற்பதுபோல் ஞானமும் ஸ்திரபுத்தியும் அடைந்தவன் என்ன துக்க சம்பவம் வந்தாலும் அதனால் பீடிக்கப்படமாட்டான். ஞானமடைந்தவனுடைய ஆத்மா நடை பெறும் நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் எஜமானனாக நிற்கும். அப்பொருளுக்கு வேற்றுமையோ அழிவோ கிடையாது என்று அறிந்தபின் பயம் ஏது?

6

ஆதியில் நீர் முதலிய பஞ்ச பூதங்கள் உண்டாகும் முன்னமே பிரம்மத்தினின்று அது உண்டாகி, பிறகு எல்லா உயிர்களின் உள்ளத்திலும் புகுந்து நின்று, ஒவ்வொரு உணர்ச்சியிலும் கலந்து நிற்கிறது. அந்த சேதனப் பொருளை ஒருவன் தனக்குள் காணவேண்டும். அதுவே நாம் ஆராயும் பொருள்.

यः पूर्वं तपसो जातमद्भ्यः पूर्वमजायत ।
गुहां प्रविश्य तिष्ठन्तं यो भूतेभिर्व्यपश्यत ।
एतद् वै तत् ॥ ६ ॥

7

எப்பொருள் உயிருடன் கூடவே உளதாகி உள்ளத்து அந்தரங்கத்தில் குடியிருந்து கொண்டு ஒவ்வொரு புலன் வழியாகவும் உணர்ச்சிகளை அநுபவித்து வருகிறதோ அதுவே நாம் ஆராயும் பொருள்.

या प्राणेन संभवत्यदितिर्देवतामयी ।
गुहां प्रविश्य तिष्ठन्तीं या भूतेभिर्व्यजायत ।
एतद् वै तत् ॥ ७ ॥

8

தாயின் வயிற்றில் மறைந்து காப்பாற்றப்படும் கருப்போலும், தீக்கடையும் அரணியில் மறைந்திருக்கும் தீயைப்போலும், உயிர்களின் உள்ளத்தில் பரம்பொருள் மறைந்து நிற்கிறது. அரணியிலிருந்து தீயைக் கடைந்தெடுப்பதுபோல் எல்லாவற்றையும் தாண்டிய பொருளை உள்ளத்திலிருந்து கடைந்தெடுத்துக் காணப் பெறலாம்.

*அரணி என்பது தீக்குச்சியில்லாத முற்காலத்தில் தீ எடுக்க உபயோகித்த கடையந்திரம்.*

अरण्योर्निहितो जातवेदा गर्भ इव सुभृतो गर्भिणीभिः ।
दिवे दिव ईड्यो जागृवद्भिर्हविष्मद्भिर्मनुष्येभिरग्निः ।
एतद् वै तत् ॥ ८ ॥

9

சூரியன் உதித்தும் மறைந்தும் வருகிறான். எங்கிருந்து வருகிறான்? எங்கே போகிறான்? உயிரின் எல்லா அகப் புலன்களும் அவ்வாறே ஆத்மாவினின்று தோன்றியும், மறுபடி ஆத்மாவில் மறைந்தும் வருகின்

றன. உள்ளிருக்கும் ஆத்மாவை மிஞ்சியது எதுவும் இல்லை. அதுவேயாகும் நாம் ஆராயும் பொருள்.

यतश्चोदेति सूर्योऽस्तं यत्र च गच्छति ।
तं देवाः सर्वे अर्पितास्तदु नात्येति कश्चन ।
एतद् वै तत् ॥ ९ ॥

## 10

அங்கிருப்பதும் இங்கிருப்பதும், அதாவது அனைத்தும் ஒரு பொருளேயாகும். வேற்றுமை உணர்ச்சி கொண்டவன் இறந்து இறந்து அலைவான். நான், நீ, அது, அவன், இது, இவன் என்று வேறுபட்ட அனைத்தும் ஒரு பொருளே. இந்த ஞானம் அடையாத வரையில் மரணமும் சம்சார சக்ரமும் நீங்காது.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் "நாமவனிவன்" என்ற நாலாம் பாசுரத்தில் சொல்லப்படுவதும் இவ்விஷயமே.

यदेवेह तदमुत्र यदमुत्र तदन्विह ।
मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ॥ १० ॥

## 11

நாம் காண்பது அனைத்தும் ஒன்றே. பரம்பொருள் தவிர வேறு ஒன்றும் இல்லை; இதை நன்ருக மனதில் பதிய வைக்க வேண்டும். வேற்றுமை உணர்ச்சி கொண்டவன் இறந்து பிறந்து ஜன்மச் சுழலில் சுழல வேண்டியதே கதி.

मनसैवेदमाप्तव्यं नेह नानास्ति किंचन ।
मृत्योः स मृत्युं गच्छति य इह नानेव पश्यति ॥ ११ ॥

## 12

கட்டைவிரல் அளவாகக் குறுகிய உருவம் கொண்டு ஆத்மா தேகத்தின் மத்தியில் இருக்கிறது. நடந்தன, வரப்போவன அனைத்துக்கும் எஜமானன். அதாவது எல்லா புறச் சம்பவங்களும் சுக துக்கங்களும் தான் கொண்ட நிலையைப் பொருந்தி நிற்கும். இதை அறிந்தவனுக்குக் காப்பு வேண்டியதில்லை; கவலை கிடையாது.

*கட்டை விரலின் அளவு என்றால், அந்த ஸ்தூல அளவு அல்ல; தனக்கென்று தனி இடம் எடுத்துக் கொள்ளாதவாறு என்றே பொருள்.*

अंगुष्ठमात्रः पुरुषो मध्य आत्मनि तिष्ठति ।
ईशानो भूतभव्यस्य न ततो विजुगुप्सते ।
एतद् वै तत् ॥ १२ ॥

## 13

கட்டை விரல் அளவாக, புகை இல்லாமல் எரியும் தீபக் கொழுந்துபோல் உள்ளத்தினுள் நிற்பது பரம்பொருள். உண்டானது, உண்டாவது இரண்டினுக்கும் எஜமானன். காலத்தினால் இப்பொருளுக்கு மாறுபாடு கிடையாது. இன்றிருக்கும் நிலையே நாளையும். ஒவ்வொரு விநாடியிலும் மாறுபட்டு வரும் உடலில், இடையறாத, ஒரு தன்மை பொருந்திய இதுவே நாம் ஆராயும் பொருள்.

अंगुष्ठमात्रः पुरुषो ज्योतिरिवाधूमकः ।
ईशानो भूतभव्यस्य स एवाद्य स उ श्वः ।
एतद् वै तत् ॥ १३ ॥

*ஆராய்ச்சி செய்பவர்கள் உயிரைப் பற்றி இரண்டு வாதங்கள் செய்வார்கள். ஒன்று, நிமிஷத்திற்கு நிமிஷம் மாறும் நினைவுகளும் உணர்ச்சிகளும் அடங்கிய தொகுதியை நிலை*

யுள்ள ஒரு தனிப் பொருளாக வைத்துக் கொள்ளக்கூடா தாகையால், ஆத்மா என்ற ஒரு பொருள் இல்லை; இரண் டாவது, மரணம் கண்டதும் இந்த உடல்தொகுதி கலைந்து போனதாகும். உயிர் நீத்தபின் ஒன்றுமே மிச்சம் கிடை யாது. இந்த இரண்டு கொள்கைகளையும் இந்த சுலோகம் மறுக்கிறது. சில மந்திரங்கள் ஜீவாத்மாவைப் பற்றியும் சில மந்திரங்கள் பரம் பொருளைப் பற்றியும் குழப்பப்படுவது போல் தோன்றும். உயிருக்கு உயிர் பரம்பொருள். 'அவன்' என்று ஒரு மனிதனைச் சொல்லும்போது, தேகத்தைப் பற்றி யும் தேகத்திற்குள் நிற்கும் ஆத்மாவைப் பற்றியும் மாறி மாறிச் சொல்லலாம். அவ்வாறே, ஆத்மாவைப் பற்றிச் சொல்லும்போது, ஜீவாத்மாவைப் பற்றியும் ஜீவனுக்கு ஜீவனாகும் பரமாத்மாவைப் பற்றியும் சொன்னதாக வைத் துக் கொள்ளவேண்டும்.

## 14

மலைமேல் பெய்த மழையானது பலவாறாகப் பிரிந்து மலைச்சாரலில் பல திக்குகளில் ஓடுவதுபோல், ஒரே பரம்பொருள் பல ஜீவன்களாகச் செல்லுகிறது. இதைப் பார்த்து விட்டு உண்மையை அறியாமல், அறிவில்லாதவனுடைய மதியானது வேற்றுமை யையே பின்தொடர்ந்து ஓடிச் செல்லும்.

यथोदकं दुर्गे वृष्टं पर्वतेषु विधावति ।
एवं धर्मान् पृथक् पश्यंस्तानेवानुविधावति ॥ १४ ॥

## 15

சுத்த நீருடன் சுத்த நீரைக் கலந்தால், இரண்டும் ஒன்றாகவே சேர்ந்துவிடும். அதைப்போல் ஞானம் அடைந்தவனுடைய ஆத்மா பரம்பொருளை உள்ளத் தில் கண்டதும் வேற்றுமை அற்று அதனுடன் ஒன் றாகி விடுகிறது.

முன் சுலோகத்தில் சொன்ன உபமானம் வேறு; இந்த சுலோகத்தில் நீரை வைத்துச் சொல்லும் உபமானம் வேறு.

உடலுணர்ச்சிகளன்றி ஆத்மா என்ற பொருள் ஒன்று மில்லை, உயிர் நீத்ததும் ஒன்றும் மிச்சமில்லை என்பது தவறு. ஜீவராசிகள் அனைத்திலும், பிரிவும் அழிவும் வேற்றுமையு மற்ற பரம்பொருளே பல உள்ளங்களில் நின்று பலவகைப் பட்ட தோற்றங்களைக் கொடுக்கிறது. ஆகையால் வேற் றுமை உணர்ச்சியை அகற்றி, தனித்த ஒரே பொருளாகிய பரம் பொருளைக் கண்டு விடுதலை அடைவாயாக, என்பது இந்த அத்தியாயத்தில் அடங்கிய உபதேசத்தின் சாராம்சம்.

यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति ।
एवं मुनेर्विजानत आत्मा भवति गौतम ॥ १५ ॥

ஐந்தாம் அத்தியாயம்

# அந்தராத்மா வேற்றுமையற்று மாசற்றது

## 1

மனிதப் பிறவியில் அடைந்த உடலானது ஒரு நல்ல அரசனால் காக்கப்பட்ட பதினொரு வாயில் படைத்த ராஜதானியாகும். அந்த அரசன் பிறப்பற்ற வன். அவனுடைய அறிவு கோணாது. அவனை நீ பக்தியுடன் அடைந்து தைரியமாக இருப்பாயாக. அவனை அடைந்தால் துயரம் நீங்குவாய். வேறு பற்றுக்களை விட்டு அடைந்தாயானால் பிறப்பு இறப்பினின்று விடுபடுவாய்.

உடலை வெறும் உடல் என்று எண்ணாதே. அது ஈசனே அரசனாக வீற்றிருக்கும் ஒரு கோட்டை. உனக்கு என்ன கவலை? என்ன துயரம்? கோட்டையினுள் கோயில் கொண்டு வீற்றிருக்கும் அரசனை சரணடைந்து நிற்பாயாக. அதாவது பரமாத்மாவைத் தியானித்து உபாசிப்பாயாக. (பரமாத்மா உன் உள்ளத்தினுள் அரசு புரிகிறான்.) ஆசைப் பற்றுகளைத் துறந்து விடுபட்டாயானால், மறு பிறப்புகளினின்று விடுபடு வாய். புறத்தில் நீ காணும் எல்லாப் பொருளிலும் அவனே இருக்கிறான். இது அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

पुरमेकादशद्वारमजस्यावक्रचेतसः ।
अनुष्ठाय न शोचति विमुक्तश्च विमुच्यते ।
एतद् वै तत् ॥ १ ॥

2

அவன் சூர்யனுகை சுத்தமான ஆகாய மண்டலத்தில் செல்லுகிறுன். அந்தரக்ஷத்தில் எங்கும் பரந்து நிற்கிறுன். யாகவேதியிலும் அவனே அக்னியாகக் காணப்படுகிறுன். மனிதன் உள்ளத்திலும் அவனே அந்தராத்மா. எல்லா தேவர்களின் உள்ளத்தில் நிற்பவனும் அவனே சத்தியமும் அவனே. ஆகாயமும் அவனே. நீரில் உண்டாகும் எல்லாப் பிராணிகளும் பொருள்களும் அவனே. பூமியில் உண்டாகும் எல்லாப் பிராணிகளும் பண்டங்களும் அவனே. வேள்விப் பயன்களும் அவனே. மலையில் உண்டாகி ஓடும் ஆறுகளும் அவனே. வேறுபட்ட அனைத்தும் அவனே. ஆயினும் அவன் வேற்றுமை யற்றவன். அனைத்தும் அடங்கப்பெற்ற பெரும் பொருள்.

हंस: शुचिषद् वसुरन्तरिक्षसद्
होता वेदिषदतिथिर्दुरोणसत्।
नृषद् वरसदृतसद्व्योमसदब्जा गोजा
ऋतजा अद्रिजा ऋतं बृहत् ॥ २ ॥

3

உடலினுள் மூச்சு மேலே கிளம்பி, மறுபடி கீழ் இறங்கச் செய்வதும் அவனே. உடலின் மத்தியில் குறுகிய மூர்த்தியாக இதயத்தில் வீற்றிருந்து எல்லா அகப்புலன்களாலும் உபசரிக்கப்பட்டு நிற்பதும் அவனே.

ஜீவனுக்கு இன்றியமையாத வாயு ஓட்டமும் புலன் உணர்ச்சிகளும் உள்ளே வீற்றிருக்கும் ஆத்மாவின் சக்தியே யன்றி வேறல்ல. இதை இன்னும் விளக்கிக் கீழே சொல்லப் படுகிறது.

ऊर्ध्वं प्राणमुन्नयत्यपानं प्रत्यगस्यति ।
मध्ये वामनमासीनं विश्वे देवा उपासते ॥ ३ ॥

## 4—5

உடலுக்குள் தங்கி நிற்கும் இந்தப் பொருள் வெளியேறிவிட்ட பின் உடலைப் பார்! என்ன மிஞ்சுகிறது? ஜீவ சக்தி ஒன்றும் இன்றி உடல் சவமாகக் கிடக்கும். எதுவின்றி உயிர் தன் சக்திகள் முழுதும் அற்றுப் போகிறதோ அந்தப் பொருளே நாம் ஆராயும் பொருள். பிராணி உயிருடன் இருப்பதற்குக் காரணம் மேலும் கீழும் இயங்கும் மூச்சு அல்ல. உட்புகும் மூச்சு வெளிவரும் மூச்சு இரண்டும் வேறொன்றை ஆதரவாகப் பற்றி இயங்குகின்றன. அந்தப் பொருளே உயிர்களுக்கு உயிர்.

अस्य विस्रंसमानस्य शरीरस्थस्य देहिनः ।
देहाद् विमुच्यमानस्य किमत्र परिशिष्यते ।
एतद् वै तत् ॥ ४ ॥

न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।
इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥ ५ ॥

## 6

ஏ கௌதமனே! கேளாய்! முன்னோர் கண்ட ரகஸ்யத்தை உனக்கு விளக்குகிறேன். மரணம் அடைந்ததும் பிராணியின் ஆத்மா என்ன ஆகிறது என்பதைச் சொல்லுகிறேன்.

हन्त त इदं प्रवक्ष्यामि गुह्यं ब्रह्म सनातनं ।
यथा च मरणं प्राप्य आत्मा भवति गौतम ॥ ६ ॥

## 7

மரணம் கண்டதும் உடலை விட்டுப் பிரியும் உயிர்கள் அதுவரை தத்தம் உடலைக் கொண்டு செய்த செயல்களையும் அடைந்த ஞானத்தையும்

ஒட்டி, அதன் பயனாக வேறு தேகங்களைத் தேடி ஜீவ ராசிகளின் கருப்பைகளுக்குள் புகும். அல்லது தாவரப் பொருளாகும். செய்த கருமங்களின் பலனுக்கும் அடைந்த ஞானத்திற்கும் தக்கவாறு மறு பிறப்பு அடையும்.

योनिमन्ये प्रपद्यन्ते शरीरत्वाय देहिनः ।
स्थाणुमन्येऽनुसंयन्ति यथा कर्म यथा श्रुतम् ॥ ७ ॥

## 8

உடலினுக்குள் உயிர் தூங்கும் போதும் விழித்த போதும் தான் விரும்பினவாறு செயல்கள் செய்து கொண்டு இடையறாமல் செல்லுகிறது. சுத்த ஆத்மா என்றும், பிரம்மம் என்றும், மரணம் அற்ற பொருள் என்றும் சொல்லப்படுவதும் அதுவே. அனைத்தும் அதைப்பற்றி நிற்கிறது. ஏதும் அதுவன்றி முடியாது அதைக் கடந்து எதுவும் செல்ல முடியாது. அதுவே நாம் ஆராயும் பரம்பொருள்.

பரம் பொருள் அவ்வுயிருக்கு உயிராக இல்லையேல் அது ஒன்றும் செய்ய முடியாது.

य एष सुप्तेषु जागर्ति कामं कामं पुरुषो निर्मिमाणः ।
तदेव शुक्रं तद् ब्रह्म तदेवामृतमुच्यते ।
तस्मिँल्लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन ॥
एतद् वै तत् ॥ ८ ॥

## 9

ஒரே நெருப்பானது தனக்கு இடமாகப் பற்றிக் கொண்ட ஒவ்வொரு பொருளின் வடிவத்திற்கும் தக்க வாறு வெவ்வேறு வடிவம் எடுத்துக்கொண்டு ஜொலிக்கிறது. அவ்வாறே ஒரே பரமாத்மா எல்லா ஜீவராசிகளுக்கும் அந்தராத்மாவாக நின்று, வெவ்

வேறு வடிவங்களாக விளங்குகிறது. வடிவங்கள் வேறு, வடிவங்களுக்குள் நிற்கும் உயிர்கள் வேறு; உயிர்களுக்கு உயிராகவிருக்கும் பரம்பொருள் வேறு. அப்பரம்பொருள் ஒன்றே.

*வேற்றுமை உணர்ச்சியை நீக்கி, எங்கும் பரந்து நிற்கும் ஒரு பொருளின் தன்மையைச் சீடன் உணர்வதற்காகப் பல வழிகளில் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. ஒரு மரக் கட்டையும் எரிகிறது; ஒரு விளக்கும் எரிகிறது; ஒரு காடும் தீப்பற்றி எரிகிறது. அவை அனைத்திலும் தீயானது வெவ்வேறு வடிவங்களில் காணப்படுகிறது. தீயின் வடிவம் பொருள்களினால் வேறுபட்டதுபோல் தோன்றினாலும், உண்மையில் வேறுபாடு கிடையாது. அவ்வாறே பலவேறு வடிவங்களில் காணப்படும் பரம்பொருள் ஒன்றே ஆயினும், உயிர்களையும் உடல்களையும் பற்றி நின்று வேற்றுமைகளைக் காட்டுகிறது. உள் நிற்கும் பொருள் ஒன்றே என்பதை உணர வேண்டும்.*

अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ ९ ॥

## 10

காற்றானது பல பொருள்களுக்குள் நின்று, பல வேறு வடிவங்களாகத் தோற்றம் காட்டுகிறது. அவ்வாறே எல்லாப் பிராணிகளிலும் ஒரு அந்தராத்மாவே தங்கி நிற்கிறது. அது வடிவங்களை மீறிய பொருள். வடிவம் வேறு, அது வேறு.

*பாண்டங்களின் வேறுபாடுகளும் அவற்றில் நிறைந்து நிற்கும் காற்றின் வேறுபாடற்ற தன்மையும் இந்த மந்திரத்தில் சொல்லப்பட்ட உபமானம்.*

वायुर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ १० ॥

## 11

இது வரையில் பரம்பொருளின் ஒருமையைப் பற்றிச் சொல்லப்பட்டது. இனி, பரம்பொருளின் மாசற்ற தன்மை விளக்கிக் காட்டப்படுகிறது.

சூரியன் உலகம் அனைத்திற்கும் கண். அனைத்துக்கும் ஒளி தந்து அவைகளை விளங்கச் செய்கிறான். மாசின்மீது வீசிய ஒளியானது பொருளை விளங்கக் காட்டுமே அல்லாமல், தீண்டிய மாசினால் ஒளியானது பழுதுபடாது. மாசற்றே நிற்கும். அவ்வாறே எல்லா ஜீவன்களுக்கும் அந்தராத்மாவாக நிற்கும் பரம்பொருளானது உலகத்தின் சுக துக்கங்களால் மாசடையாமல் சுத்தப் பொருளாகவே நிற்கும்.

எல்லா உடல்களில் நிற்பதும் அதுவே என்ற பின், அவ்வுடல்கள் படும் துக்கம் அனைத்தும் அதைப் பீடிக்கும் அல்லவா என்ற கேள்வி பிறக்கிறது. சுகதுக்கங்கள் உயிரைத் தீண்டும். ஆயினும் உயிருக்குக் காரணமாக நிற்கும் மெய்ப் பொருள் அதனால் பாதிக்கப்படமாட்டாது. அஞ்ஞானத்தால் உண்டான வேற்றுமை உணர்ச்சி நீங்கியவுடன் மெய்ப் பொருளின் மாசற்ற தன்மை தானாகவே விளங்கும். பழுதை பாம்பாக நினைக்கப்படுமேயல்லாமல், பழுதை பாம்பாகவே மாறுபடாது என்றபடி.

> सूर्यो यथा सर्वलोकस्य चक्षु-
> न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः ।
> एकस्तथा सर्वभूतान्तरात्मा
> न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥ ११ ॥

## 12

ஒரே ஆத்மா, அனைத்துக்கும் எஜமானன். எல்லா உயிர்களுக்குள்ளும் நிற்பவன். தன்னைப் பல வடிவங்களாகச் செய்துகொண்டு விளங்குபவன். இவனை

அறிவு படைத்தவன் தன் உள்ளத்திற்குள் காண்பான். அவ்வாறு ஒன்ருகக் கண்டவன் முடிவற்ற இன்பம் அடைவான். காணுதவனுக்கு இன்பம் கிடையாது.

சர்வ ஜீவராசிகளுக்குள்ளும் ஒரே பரமாத்மாதான் நிற்பது என்பதை ஒருவன் கண்டு, தனக்குள் நிற்பது பரம்பொருளே என்கிற ஞானத்தை அடைந்தவுடன் விடு பெறுகிருன்.

இந்த ஞானம் அடைவதே மோக்ஷத்திற்கு மார்க்கம். அதைப் பூரணமாக அடைவது முடியாதாயினும், அரை குறையாக நாம் அடைந்தாலும் அதனுல் மாசுகள் நீங்கப் பெற்று நற்குணங்களை அடைவோம். வாழ்க்கையில் நாம் செய்யப்போகும் பல பாவச் செயல்களினின்று தப்புவோம்.

ஸ்ரீபகவத் கீதை 6-வது அத்தியாயம் 29-31 சுலோகங்களைப் பார்க்க.

एको वशी सर्वभूतान्तरात्मा
एकं रूपं बहुधा यः करोति ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरा-
स्तेषां सुखं शाश्वतं नेतरेषाम् ॥ १२ ॥

## 13

அழியும் பொருள்களுக்குள் அழியாமல் நிற்கும் பொருள் இதுவே. சேதன உயிருக்கு உயிராக நிற்கும் இதுவே பல சுகங்களைத் தரும் தனிப் பொருள். இந்தப் பரம்பொருளை தம் உள்ளத்தில் கண்டோருக்குத் தான் அழியாத சாந்தி. மற்றவர்களுக்குக் கிடைக்காது.

नित्योऽनित्यानां चेतनश्चेतनाना-
मेको बहूनां यो विदधाति कामान् ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरा-
स्तेषां शान्तिः शाश्वती नेतरेषाम् ॥ १३ ॥

## 14

உள்ளத்தில் நிற்கும் அந்தராத்மாவே குறிப்பிட முடியாத பரம்பொருள் என்பார்கள் பெரியோர்கள். அதுவே ஆனந்தப் பொருள். என் உள்ளத்தில் நான் கண்ட இந்த அந்தராத்மாவானது தன் ஒளியாலேயே பிரகாசிக்கிறதா? அல்லது, வேறு ஒரு பரம்பொருளின் ஒளியை அது வீசுகிறதா? இதை நான் எவ்வாறு கண்டு சொல்ல முடியும்?

तदेतदिति मन्यन्तेऽनिर्देश्यं परमं सुखं ।
कथं नु तद्विजानीयां किमु भाति विभाति वा ॥ १४ ॥

## 15

இப்பொருளுக்கு சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல் இவைகளால் உண்டாகும் ஒளி வேண்டியதில்லை. நாம் வைத்து வளர்க்கும் இந்தத் தீ அதனுக்கு என்ன செய்யும்? அனைத்தின் ஒளியும் அப்பரம்பொருளின் ஒளியே. எல்லாம் அந்த ஒளியினாலுண்டாகும் பிரகாசமே அன்றி வேறு அல்ல

என் உள்ளத்தில் தங்கி நிற்கும் அந்தராத்மாவும் பரம்பொருளின் பிரகாசமே அன்றி வேறல்ல.

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम्
नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं
तस्य भासा सर्वमिदं विभाति ॥ १५ ॥

ஆருவது அத்தியாயம்

# பற்றறுத்தலே விடுதலைக்கு வழி

## 1

நாம் காணும் உலகம் பெரிய அசுவத்த மரம். அதன் வேர் மேலும் கிளைகள் கீழுமாக அமைந்திருக்கிறது. அதன் வேர் சுத்த ஒண் பொருளான பிரம்மம், அழிவற்ற பரம்பொருள். உலகமெல்லாம் அதனுல் தாங்கப் பெற்று நிற்கிறது. எதுவும் அமிருதம் என்ற அந்தப் பரம்பொருளை அன்றி இல்லை. அதுவே நீ ஆராயும் பொருள்.

*அமிருதம் என்பது, அந்தராத்மாவுக்கு ஆகு பெயர். முன் ஐந்தாவது அத்தியாயத்தில் 8 வது சுலோகத்தைப் பார்க்க.*

*அசுவத்த மரத்தைப்பற்றி பகவத்கீதை 15-வது அத்தியாயத்தில் முதல் மூன்று சுலோகங்கள் பார்க்க.*

ऊर्ध्वमूलोऽवाक्शाख एषोऽश्वत्थः सनातनः ।
तदेव शुक्रं तद् ब्रह्म तदेवामृतमुच्यते ।
तस्मिँल्लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन ।
एतद् वै तत् ॥ १ ॥

2

உலகம் முழுவதும் அப்பொருளினின்று உண்டானது. அனைத்தும் அப்பொருளின் ஆதிக்கத்துக்கு அஞ்சித்தான் செல்லுகின்றன. ஓங்கிய வஜ்ராயுதம் போன்ற அந்த ஆதிபத்தியத்தின் கீழ் உலகம் பயந்து நிற்கிறது. உலகத்தில் அனைத்தும் அந்த ஆட்சிக்கு அடங்கியது. இதை அறிந்தவனே மெய்ப்பொருளுடன் கலந்து இறவாமை அடைவான்.

यदिदं किंच जगत् सर्वं प्राण एजति निःसृतम् ।
महद्भयं वज्रमुद्यतं य एतद् विदुरमृतास्ते भवन्ति ॥ २ ॥

3

அப்பராசக்தியின் ஆட்சிக்கு பயந்தே இந்த அக்னி எரிகிறது. அதற்கு அஞ்சியே சூரியனும் பிரகாசிக்கிறான். மழை பெய்வதும் காற்று வீசுவதும் அந்த ஆதிபத்தியத்திற்கு அடங்கியேதான். காலன் உயிரைக் கொள்வதும் அந்தப் பரம்பொருளின் அரசுக்கு அடங்கியே தான்.

*அக்னி, சூரியன், இந்திரன், வாயு, எமன் என்று உலக சம்பவங்களை ஐந்து வகையாகச் சொல்லி, அனைத்தும் ஈசனுடைய செங்கோல் முறை என்று சொல்லப்பட்டது. உயிரை இழக்க மனம் வராமல் மரணத்தைக் கண்டு உடல் நடுங்குவதுங்கூட அந்தச் செங்கோல் முறையின் பயத்தின் எதிரதிர்ச்சியாகவே கொள்ளலாம்.*

भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः ।
भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः ॥ ३ ॥

4

உயிர் நீப்பதற்கு முன்னமே ஒருவன் ஞானம் அடைந்தானுல், சம்ஸாரத்தினின்று விடுதலை அடைவான். இல்லாவிடில் உடல்களை அடைவான்.

इह चेदशकद् बोद्धुं प्राक् शरीरस्य विस्रसः ।
ततः सर्गेषु लोकेषु शरीरत्वाय कल्पते ॥ ४ ॥

5

மனிதப் பிறவியில் பரம்பொருளை கண்ணுடியில் காணும் உருவத்தைப் போல் காணலாம்; பித்ரு லோகத்தில் கனவினில் காணும் உருவங்களைப்போல் காணலாம்; கந்தர்வ லோகத்தில் நீரில் காணும் உருவம்போல் காணலாம்; பிரம்ம லோகத்தில் வெயிலில் நிழலைப் போல் காணலாம்.*

மனித ஜன்மத்தில் பரமாத்மாவைப் பற்றிய ஞானம் அடைவதற்கு வழி தன் உள்ளத்தில் தங்கி நிற்கும் அந்தராத்மாவை உபாஸிக்க வேண்டும். அது பரம் பொருளின் ஒளி தங்கிய உருவம். அதற்கு உபமானம் கண்ணுடியில் காணும் உருவம். பித்ரு லோகத்திலும் கந்தர்வ லோகத்திலும் கனவி

---

* இந்த சுலோகத்தின் பொருள் விளங்கவில்லை என்றே சொல்ல வேண்டும். ஸ்ரீ சங்கராச்சாரியருடைய உரையும் பொருளைத் தெளிவாக விளக்கவில்லை. சாந்தோக்ய உபநிஷத்தில் இந்திரனும் விரோசனனும் பிரஜாபதி யிடம் உபதேசம் பெறச் சென்றதாகவும், அவருடைய சொல்படி ஆத்மாவைக் கண்ணுடியிலும் நீரிலும் கனவிலும் பார்த்ததாகச் சொல்லப்படுகிறது. அந்தக் கதையையும் உபதேசத்தையும் வைத்துப் பார்த்தாலும் இந்த சுலோகத்தின் பொருள் சரியாக விளங்கவில்லை. மிகவும் முக்கியமான விஷயம் அடங்கி நிற்கும் இந்த உபநிஷத்து மந்திரத்திற்குச் சரியானபடி அமைந்த வியாக்கியானம் இல்லையே என்று யாவரும் வருந்த வேண்டியதே.

லும் நீரிலும் காணும் உருவங்கள் போல் என்றால், கண்ணாடியில் காண்பதைப்போல் அவ்வளவு நன்றாக உருப்படாமல் இருக்கும் என்பது ஸ்ரீ சங்கராச்சாரியார் உரை. பிரம்ம லோகத்தில் நிழல்போல் என்றால், அங்கேயுங்கூட பரம் பொருள் தன் உண்மை நிலையை அடையவில்லை. உண்மையின் நிழல்தான் என்றவாறு.

यथादर्शे तथात्मनि
यथा स्वप्ने तथा पितृलोके ।
तथाप्सु परीव ददृशे तथा गन्धर्व-
लोके छायातपयोरिव ब्रह्मलोके ॥ ५ ॥

## 6

புலன்களின் வழியாக அடையும் உணர்ச்சிகளை ஆராய்ந்து பார்த்தால், அவை விழித்திருக்கும்போது உண்டாவதும், தூங்கும்போது முற்றும் மறைந்து போவதுமாக, காண்கிறோம். புலன்கள் தோன்றியும் மறைந்தும் போவதைக் கவனித்தால், அவை மூல சக்திகளல்ல என்பதும், அவைகளின்று ஆத்மா வேறுபட்ட பொருள் என்பதும் காணப் பெறலாம். ஆத்மாவைப் பற்றிய அறிவைச் சரியாக அடைந்தவன் துயரத்தைக் கடந்து நிற்பான்.

इन्द्रियाणां पृथग्भावमुदयास्तमयौ च यत् ।
पृथगुत्पद्यमानानां मत्वा धीरो न शोचति ॥ ६ ॥

புலன்களின் வழியாக அடையும் உணர்ச்சிகளை நன்றாகக் கவனித்தால், அவைகளை அடையும் வேறொரு தனிப்பொருள் உள்ளத்தில் இருப்பதை உணரலாம். புலன்கள் விழித்திருக்கும்போது வேலை செய்கின்றன. தூங்கும்போது எங்கேயோ இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகின்றன. ஆயினும் " நான் " என்ற உணர்ச்சி இடையறாமல் நிற்கிறது. மனிதர்கள் கூடினால் சந்தை. மனிதர்களைத் தவிர்த்து சந்தை வேறு இல்லை. ஆனால் உடலும் புலன்களும் அவ்வாறல்ல.

" நான் " என்கிற உணர்ச்சி சந்தைக்கு இல்லை. மனிதன் உள்ளத்தில் அந்த உணர்ச்சி இருக்கிறது. அதற்கு ஆதார மாக ஒரு சேதன சக்தி இருக்க வேண்டும்.

மனிதனுக்கு அடிக்கடி உண்டாகும் சந்தேகம் இதுவே. சந்தேகம் தீர திருப்தி செய்து கொண்டாலுங்கூட, திரும்பத் திரும்ப அஞ்ஞானம் மூடிக் கொள்ளுகிறது. உடலும் புலன் களும் தவிர்த்து, வேறு ஒரு பொருள் தனக்குள் உண்டா என்பதை உறுதியாகத் தீர்த்துக் கொண்டால், ஞானமும் பக்தியும் சத்தியமும் தேயாமல் நிற்கும். அதற்காகவே உப நிஷத்துக்காரர் ஆத்மாவைப் பற்றிப் பல வேறுவிதங்களில் ஆராய்ச்சி செய்து காட்டுகிறார்.

## 7—8

மூன்றும் அத்தியாயம் 10-11-வது சுலோகங்களில் சொன் னது இவ்விடம் திரும்பச் சொல்லப்படுகிறது.

இந்திரியங்களைக் கடந்தது மனம். மனதைக் கடந்தது புத்தி. புத்தி அல்லது ஸத்வம் என்பது மன தைச் செலுத்தும் உறுப்புக்குப் பெயர். ஸத்வத்தை யும் கடந்த பொருள், அதாவது எந்தப் பொருளுக்குப் புத்தியானது தொண்டு செய்கிறதோ அது, 'மகத்' என்று சொல்லப்படும் ஆத்மா. 'மகத்'துக்கு மேல் அவ்யக்தப் பொருள். அவ்யக்தத்தைக் கடந்தும் நிற் பது பரமன் அல்லது புருஷோத்தமன். அவன் எங்கும் பரவி, இலக்கணத்துக்கு அடங்காமல் நிற்கிறான். அவனைத் தனக்குள் கண்டவன் விடும், இறவாமையும் அடைந்தவான்.

इन्द्रियेभ्यः परं मनो मनसः सत्वमुत्तमम् ।
सत्त्वादधि महानात्मा महतोऽव्यक्तमुत्तमम् ॥ ७ ॥
अव्यक्तात् तु परः पुरुषो व्यापकोऽलिङ्ग एव च ।
यं ज्ञात्वा मुच्यते जन्तुरमृतत्वं च गच्छति ॥ ८ ॥

பரம்பொருளுக்கும் புலன்களுக்குக் கோசரமாக நிற்கும் உலகத்திற்கும் இடையிலுள்ள பெரும் வெளியைத் தாண்ட எவ்வளவோ விதமாகப் படிகளை கற்பித்துக்கொள்ளலாம்.

## 9

பார்வைக்கு அடங்காத அவன் உருவம் கண்களுக்குப் புலப்படாது. இதயத்தில் கலக்கமற்று நிற்கும் புத்தியாலும் சஞ்சலமற்ற மனதாலும் தியானத்தாலும் உணரப் பெறலாம். அவ்வாறு உணர்ந்தவர்கள் பிறப்பும் இறப்புமற்ற அமிருத நிலையை அடைவார்கள்.

न सन्दृशे तिष्ठति रूपमस्य
न चक्षुषा पश्यति कश्चनैनम् ।
हृदा मनीषा मनसाभिक्लृप्तो
य एतद् विदुरमृतास्ते भवन्ति ॥ ९ ॥

## 10—11

ஐந்து அறிவுகளும் மனதும் சஞ்சலமற்று அடங்கி, புத்தியும் கலங்காமல் நின்றால், அது உத்தம யோக நிலையாகும். புலன்களைத் திடமாக அடக்குவதே யோகம் என்பார்கள். யோகம் தோன்றி மறைவது இயல்பு.

புத்தியின் வேகம் மனதின் மேல் செல்லும். யோக நிலையடைய புத்தி கலக்கமற்று அடங்க வேண்டும், அப்போது தான் இந்திரியங்கள் சரிவர அடங்கப்பெறும். இல்லாவிடில் திரும்பத் திரும்பக் கலக்கம் ஏற்படும். இடையறாத கவனத்துடன் புத்தி, மனம் இந்திரியங்கள் இவைகளை அடக்க வேண்டும். இத்தகைய யோக நிலையை அடைந்தால் உள்ளத்தில் மறைந்து நிற்கின்ற ஆத்மாவைக் காணலாம். ஆனால் அடையப் பெற்ற ஆத்ம ஞானம் உதயாஸ்தமனம் போல் உதயமாகி, மறுபடியும் மறைந்து, மறுபடி உதயமாகியும்

மறுபடி மறைந்தும் தான் காணலாம். யோக நிலையை ஒரே வாக்காக வைத்துக் காப்பாற்றுவது முடியாது. ஆகையால் கவனமாக இந் நிலையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். ஆத்மாவைக் கண்டதும் ' தான் ' என்பது அற்றுப்போகும். ஆனால் உயிருள்ள வரையில் ' தான் ' என்ற உணர்ச்சி திரும்பத் திரும்ப வரும்.

यदा पञ्चावतिष्ठन्ते ज्ञानानि मनसा सह ।
बुद्धिश्च न विचेष्टते तामाहुः परमां गतिम् ॥ १० ॥
तां योगमिति मन्यन्ते स्थिरामिन्द्रियधारणाम् ।
अप्रमत्तस्तदा भवति योगो हि प्रभवाप्ययौ ॥ ११ ॥

## 12

இந்தப் பொருளானது மொழி, காட்சி, எண்ணம் இவைகளுக்கு அடங்கப் பெறாத பொருள். " ஆம், உண்டு " என்று சொல்ல முடியும். ஆனால் அதற்கு மேல் அதன் இலக்கணங்களை உணர்ச்சி எட்டாது.

புலன்கள் வழி உணரப்படும் உலகத்திற்கு மூல காரணம் இருக்க வேண்டும் என்பது உறுதியாயினும், அந்த மூல காரணம் புலன்களுக்குப் புலப்படாது. அது மனதாலும் பிடிபடாது. யோக நிலையை அடைந்தே உணரப் பெறலாம். வேறு வழி இல்லை.

नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुषा ।
अस्तीति ब्रुवतोऽन्यत्र कथं तदुपलभ्यते ॥ १२ ॥

## 13

அனைத்துக்கும் காரணமான பரம்பொருள் ஒன்று இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு மட்டும் ஒருவன் வரலாம். இவ்வாறு உறுதியாக உண்மையை உணர்ந்தால் காட்சியும் பெறலாம்.

எந்தப் பரம் பொருளை ஆராய்ந்தறியப் பார்க்கி ருேமோ அதுவே அறிவு ஸ்தானமானபடியால் அதைப் பற்றிய அறிவுக்கு வேறு இடமில்லை. கண்மூலம் பொருளைக் காணலாம். ஆனல் கண்ணையே கண்ணனது காண முடியா ததுபோல், புலன் உணர்ச்சியும் மனதும் புத்தியும், 'நான்' என்ற ஆத்ம உணர்ச்சியும் அனைத்துமே உள் நிற்கும் மூலப் பொருளின் மருவிய உருவங்களானபடியால், அதைக் கொண்டு அதையே சாதாரண முறையில் காணப்பெற முடி யாது, கருதவும் முடியாது. இவ்வாறு அறிவுக்கு எட்டாப் பொருளை அப்படி அடைவது என்பது கீழே சுருங்கச் சொல்லப்படும். ஆசைகளின் மோகவலை அழிந்துத் தீர்ந் தால், தன் உண்மை நிலையைத் தானே அறியும். அதுவே அமிருத நிலை.

अस्तीत्येवोपलब्धव्यस्तत्त्वभावेन चोभयोः।
अस्तीत्येवोपलब्धस्य तत्वभावः प्रसीदति ॥ १३ ॥

## 14

இதயத்தைப்பற்றி நிற்கும் எல்லா விருப்பங் களும் நீங்கப் பெற்ருல், மனிதன் இறவா நிலை அடைந்து பிரம்மத்தை அடைவான்.

விருப்பங்கள் நீக்கியவுடன் ஆத்மா தானுகப் பிரகாசிக் கும். கனவும், தூக்கமும் நீங்கி விழித்தெழுந்தாற்போல் விளக்கம் உண்டாகும்.

यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिताः।
अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते ॥ १४ ॥

## 15

இதயத்தைக் கட்டுப் படுத்தும் முடிச்சுகள், அதாவது பற்றுக்கள், மோகங்கள், 'நான்,' 'எனது' முதலியன நீங்கியதும் பிரம்மத்தை மனிதன் அடைவான்; இது உறுதி.

*விருப்பங்கள் நீங்க, பற்றுகள் நீங்கும். பற்று நீங்க, விருப்பங்கள் நீங்கும். விடுதலை மார்க்கம் வர வர எளிதாகும்.*

यदा सर्वे प्रभिद्यन्ते हृदयस्येह ग्रन्थयः ।
अथ मर्त्योऽमृतो भवत्येतावदनुशासनम् ॥ १५ ॥

## 16

இதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் வெளிக் கிளம்புகின்றன. இந்த நூற்றொரு நாடிகளுக்குள் ஒன்று மேல் நோக்கிச் சென்று பிரம்மத்தை அடையும். மற்றவையனைத்தும் பல வேறு ஆசைகளைப் பற்றி நிற்கும். அவைகளைத் தொடர்ந்து ஜீவன் வெளியேகினால், விடுதலை அடைய மாட்டான். உச்சித் தலைவழி செல்கிறதின் வழியே ஆத்மா பிரம்மத்தை அடையும்.

*மற்ற நாடிகளின் வழி ஜீவன் வெளியேகுவது என்றால், ஆசைகளுடனும் பற்றுகளுடனும் உடல் நீப்பது என்று பொருள். மெய்ப் பொருளை அடையும் விருப்பமே நூற்றொராவது நாடியாக வைத்துச் சொல்லப்பட்டது.*

शतं चैका च हृदयस्य नाड्य-
स्तासां मूर्धानमभिनिःसृतैका ।
तयोर्ध्वमायन्नमृतत्वमेति
विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति ॥ १६ ॥

## 17

புருஷோத்தமன் மனிதன் உள்ளத்தில் எப்போதும் இருக்கிறுன். இலேகளே இழுத்தெறிந்து நாணலேப் பிரித்தெடுப்பதுபோல், உறுதியான மஞே நிலேயுடன் உள்ளத்தில் வீற்றிருக்கும் பரம்பொருளே மூடி மறைக்கும் பற்றுக்களே ஒன்ருென்ருகக் கழற்றிக் கழற்றித் தள்ளிப் பரம் பொருளேத் தன் உள்ளத்தினில் காண வேண்டும். மாசற்றதும் இறவாததுமான மெய்ப் பொருள் அப்போது காட்சி தரும். மெய்ப் பொருள் அதுவே காண், அதுவே காண்.

அளவுக்கு அடங்காத பரம்பொருள் தன்னேச் சிறிதாக்கிக் கொண்டு உள்ளத்தில் இவ்வாறு நிற்கிறது.

இருதரம் சொல்லி முடிப்பது உபதேசத்தை உறுதிப் படுத்த.

अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः ।
तं स्वाच्छरीरात् प्रवृहेन्मुञ्जादिवेषीकां धैर्येण ।
तं विद्याच्छुक्रममृतं तं विद्याच्छुक्रममृतमिति ॥ १७ ॥

## 18

இவ்வாறு எமஞல் யோக முறைக்கு வேண்டிய விதிகளும் மெய்ப் பொருளேப் பற்றிய அறிவும் உபதேசிக்கப் பெற்று நசிகேதன் ஆசை, கலக்கம், மயக்கம் முதலியன தீர்ந்து, வீடு பெற்ருன் தன்னேத் தான் கண்டு கொண்ட எவனும் நசிகேதனேப் போலவே விடு பெறுவான்.

*ஆக, இந்த உபநிஷத்தின் சாரம் :*

***சிற்றின்பங்களிஞலும் இக சுகங்களிஞலும் மனிதன் திருப்தி அடைய முடியாது. உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் ஆத்மாவைக் காண்பதே நிலேயான இன்பம்.***

உடலே உயிரல்ல, புலன்களின் வழி உண்டாகும் உணர்ச்சிகளே உயிர் என்று எண்ணத் தோன்றும். அதுவும் தவறு. அனைத்துக்கும் காரணமும், ஆதாரமும், உயிருக்கு, உயிருமான பரம்பொருள் மறைந்து நிற்கிறது. அது மனிதன் உள்ளத்திலேயே இருந்தாலும் ஆசைப் பற்றுகளினால் மறைந்து கிடக்கிறது. அதன் தரிசனம் பெற அறிவுமட்டும் போதாது. புலன்களை அடக்கி மனதைச் சாந்த நிலையில் நிறுத்திப் பற்றுகளை ஒன்றொன்றாகக் களைந்து தியானம் செய்ய வேண்டும். இதுவே யோகம். புலன்களும் மனமும் திரும்பத் திரும்ப மயக்கத்தினுள் செல்லும். அவ்வாறு செல்ல விடாமல், யோகத்தில் நின்றால், வேற்றுமை உணர்ச்சி அற்றுப்போய் 'நான்' என்பது பரம்பொருளில் கலந்து ஒன்றுபட்டுப் போகும். அதுவே விடுதலை.

मृत्युप्रोक्तां नचिकेतोऽथ लब्ध्वा
विद्यामेतां योगविधिं च कृत्स्नम् ।
ब्रह्मप्राप्तो विरजोऽभूद् विमृत्यु-
रन्योऽप्येवं यो विदध्यात्ममेव ॥ १८ ॥

ओं सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै ।
तेजस्वि नावधीतमस्तु । मा विद्विषावहै ॥

ओं शान्तिः । शान्तिः । शान्तिः ।

# பாரதீய வித்யா பவன்

## அங்கம் வகிக்கும் ஸ்தாபனங்கள்

1. மும்பாதேவி சம்ஸ்கிருத மகாவித்யாலயம்.

சம்பிரதாய முறையில் சம்ஸ்கிருத மொழியையும் சாஸ்திரங்களையும் கற்பிக்கும் கீழ்த்திசைக் கல்லூரி.

இதன் பிரிவுகள் :



1. மும்பாதேவி சம்ஸ்கிருத பாடசாலை.

இது விசேஷ சாஸ்திரீயக் கல்விக்காக நிறுவப்பட்டுள்ளது.

2. தேவிதாஸ் லல்லு பாய் பாடசாலை.

ஆரம்ப சம்ஸ்கிருதப் பயிற்சி, ஆரம்ப சாஸ்திரீயக் கல்வி ஆகியவற்றிற்காக நிறுவப்பட்டது.

3. நாகர்தாஸ் ரகுநாததாஸ் ஜோதிஷ சிக்ஷா பீடம்.

இந்திய ஜோதிஷ சாஸ்திரம், இந்திய வானசாஸ்திரம் ஆகியவற்றில் பயிற்சிக்காக நிறுவப்பட்டது.

4. புருஷோத்தம் தக்கர் வேதசாலா.

வேதங்களை முறைப்படி பயில ஏற்படுத்தப் பட்டது.

பரீட்சைகள் : இலக்கியம், இலக்கணம், வேதாந்தம், சோதிடம் ஆகிய வற்றில் பாரதீய வித்தியா பவன் அளிக்கும் தேர்வுப் பட்டங்களான 'சாஸ்திரி', 'ஆசார்ய', 'வாசஸ்பதி' இவைகளுக்காகப் பரீட்சைகள் நடத்தப் படுகின்றன. (இவை மகாராஷ்டிர அரசாங்கத்தாரின் அங்கீகாரம் பெற்றவை.)

வசதிகள் : எல்லோருக்கும் இலவசக் கல்வி, தகுதியுள்ள மாணவர் களுக்கு உபகாரச் சம்பளம், இலவச உணவு, இருக்கை வசதி.

2. கீதா வித்யாலயம்.

இந்தியக் கலாசாரத்தை, குறிப்பாக பகவத்கீதையை யொட்டி கற்பிக்கும் வித்வத்சபை. பவனத்திலும், மற்றும் 19 இடங்களிலும் வகுப்புகள் நடை பெறுகின்றன. 'கீதாவித், கீதாவிஷாரத்' ஆகிய பட்டங்களுக்காக பரீட்சைகள் நடத்தப் படுகின்றன. தேர்ச்சி பெற்ற மணவர்களுக்கு உபகாரச்சம்பளமும் பதக்கங்களும் பரிசுகளும் அளிக்கப்படுகின்றன.

3. முங்காலால் கோயங்கா சம்சோதன் மந்திர் (ஆராய்ச்சிக் கழகம்).

பம்பாய் பல்கலைக் கழகத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட பி. எச். டி., எம். ஏ. போன்ற சிறப்புப் பட்டங்களுக்காக நடத்தப்படும் உயர்தரக் கல்விபோதனை, ஆராய்ச்சி முதலியவைகளுக்கான நிறுவனம்.

பிரிவுகள் : 1. சம்ஸ்கிருத சிக்ஷாபீடம். 2. ஸிங்கீ ஜைன் ஸாஹித்ய சிக்ஷாபீடம். 3. நர்மத் குஜராத்தி சிக்ஷாபீடம். 4. பாகவத தர்ம சிக்ஷா பீடம். 5. பாரதீய இதிகாஸ விபாக் (பிரிவு).

வசதிகள் : தகுதியுள்ள மாணவர்களுக்கு உபகாரச் சம்பளமும் இலவச போதனைகளும் தரப்படுகின்றன.




4. முன்ஷி சரஸ்வதி மந்திர் (கலாசாரக் கழகம்).

பிரிவுகள்—(1) குழந்தைகள் பகுதியும், அரிய தரமான நூல்களையும் கொண்ட பெரிய நூல் நிலையம். இதில் ஏறக்குறைய 40,000 புத்தகங்கள் உள்ளன. (2) விலை மதிப்பற்ற புராதன ஏட்டுப் பிரதிகள், சித்திரங்கள், சிற்பங்கள் கொண்ட நல்ல காட்சிச்சாலை. (3) அகில இந்தியக் கலாசாரக் கட்டுரைப் போட்டி. (4) பாரதீய சங்கீத சிக்ஷாபீடம் — இசைக்கலையைப் பற்றிய ஆராய்ச்சி, மற்றும் இசை கற்பிக்கும் சங்கீதசபை—இது லக்ஷ்மணபுரி தேசீய ஹிந்துஸ்தானி சங்கீத அகாடமியுடன் இணைக்கப் பெற்று நடுநிலைத்தேர்வு, பட்டப்படிப்பு ஆகிய வகுப்புகளுக்குப் பயிற்சி அளித்து வருகிறது. (5) பாரதீய கலா கேந்திரம் — நாடகம், நாட்டியம் முதலிய கலைகளைக் கற்பிக்கவும் நடத்திக்காட்டவும் ஏற்படுத்திய கலைமன்றம்.

5. பிரகாஷன் மந்திர் (பதிப்பகம்).

(1) பவன், குஜராத்தி சாகித்திய பரிஷத், முன்ஷி சாகித்யம் ஆகியவைகளின் ஆராய்ச்சி இலக்கிய வெளியீடுகளைப்பிரசுரிக்கிறது இப்பதிப்பகப் பகுதி. (2) புக்யூனிவர்சிடி—புராதன—நவீன உலக இலக்கியங்களையும், அபூர்வ நூல்களையும் ஒரே அளவில், குறைந்த விலையில், எளிய மக்களுக்கும் கிடைக்கும் வகையில் வெளியிட ஏற்படுத்தியுள்ள திட்டம்.

6. எம். எம். கலைக் கல்லூரி; எம். எம் விஞ்ஞான ஸ்தாபனம்.

பம்பாய் சர்வகலாசாலையுடன் இணைக்கப்பெற்று, பாரதீய வித்யா பவன் நடத்திவரும் கல்லூரி. பி.ஏ., பி.எஸ்.ஸி., எம்.ஏ., எம்.எஸ்.ஸி., பி.எச்.டி., போன்ற உயர்தரப் பட்டங்களுக்குக்கான வகுப்புகள் சிறப்பாக நடத்தப்படுகின்றன. இக்கல்லூரியில் கீதா அகாடமியும் உள்ளது.

7. அச்சுக் கலைக் கழகம்.

அச்சுக் கலைக் கழகத்தை நிறுவுவதன் பொருட்டு, அஸோஸியேடட் அட்வர்டைஸர்ஸ் அண்டு பிரிண்டர்ஸ் லிமிடெட், என்ற பம்பாயின் சிறந்த அச்சகத்தில் பெருவாரியான பங்குகளைப் பவன் வாங்கியுள்ளது.

8. பாரதீய கல்விக் குழு.

இந்தக் குழுவின் ஆதரவில் ஆன்மீகம், அரசியல், பொருளாதாரம் முதலிய துறைகளில் தலைசிறந்த மேதைகளைக் கொண்டு, தொடர்ச்சியாகச் சொற்பொழிவுகள் நிகழ்த்த வசதி செய்யப்படுகிறது.

பவனத்துடன் இணைந்துள்ள ஸ்தாபனங்கள்:

1. குஜராத்தி சாகித்ய பரிஷத். 2. ஸ்ரீ சாகித்ய ஸம்ஸத். 3. பம்பாய் ஜோதிஷக் கழகம், 4. பாரதீய ஸ்திரீ சேவா சங்கம்.






## இதன் ஆசிரியர்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி அவர்களுக்கு அறிமுகம் தேவை இல்லை. ராஜாஜி, ஸி. ஆர். எனும் சிறப்புப் பெயர்களில் இவர் உலகப் புகழ் பெற்றிருப்பவர். தலைசிறந்த தேச பக்தர்; மதி நுட்பம் மிக்க அரசியல் மேதை; தீர்க்கதரிசி; சிறந்த சிந்தனையாளர்; பாரதத்தின் பழம் பெரும் தலைவர்களில் ஒருவர்.

மேலும், அண்ணல் காந்தியடிகளுக்குச் சிறந்த துணைவராகவும், விடுதலை இயக்கத்தின் தீரத் தொண்டராகவும், சென்னை மாநிலத்தின் முதல மைச்சராகவும், மேற்கு வங்காளத்தின் கவர்னராகவும், இந்திய அரசாங்கத்தில் உள்நாட்டு மந்திரியாகவும், முதல் இந்திய கவர்னர்-ஜெனரலாகவும் விளங்கி, இவர் நாட்டுக்குப் புரிந்துள்ள மேன்மையான தொண்டுகள் மக்கள் உள்ளத்தில் அழியா இடம் பெற்றுள்ளன.

தவிரவும், ராஜாஜி தலைசிறந்த எழுத்தாளர். இவர் எழுதியுள்ள மார்க்கஸ், அரேலியரின் 'ஆத்மசிந்தனை' 'வேதாந்த தீபம்' (கடோபநிஷத்து) ''கண்ணன் காட்டிய வழி''(கீதை), ''உபநிஷதப்பலகணி'' முதலிய ஆத்மீக அறிவியல் நூல்கள் தனிப் புகழ் பெற்றவை. கதை கூறும் கலையில் புத்தொளி வீசும் புதுவழியைக் காட்டியவர். வியாசர் விருந்து (மகாபாரதம்) சக்கரவர்த்தித் திருமகன் (ராமாயணம்) மூலமாக இலக்கிய பரம்பரையில் தனி மரபை உருவாக்கியதுமல்லாமல், லட்சோபலட்சம் வாசகர்களையும் ஏற்படுத்தி, அவர்களது இலக்கிய ரசனையை உயர்தரமாக்கிய சாதனையாளர் இவர்.

இந்த புஸ்தகம் முந்திய வேதாந்ததீபத்தின் விரிவான புதிய பதிப்பு. இது நமது வேதாந்த தத்துவத்தில் ஆர்வம் கொண்டுள்ளவர்களுக்கு நல்ல பயனையும் மகிழ்வையும் அளிக்கும். இன்றைய சமுதாய வாழ்வில் சூழ்ந்துள்ள இன்னல் - இடையூறுகளை யெல்லாம் போக்க வேண்டுமானல் ஒவ்வொருவரும் தம்மை ஆத்ம சோதனை செய்து கொள்ள வேண்டும் மேலும், நல்லொழுக்கம், தார்மிகப் பண்பாடு, தர்மசிந்தனை இவைகளைத் திடமாகக் கடைபிடித்தால்தான், மனித இனம் சுய அழிவிலிருந்து விடுபட்டு முன்னேற முடியும். அறநெறியின் அடிப்படையில் உருவான உயரிய பண்பாட்டை எட்டமுடியாமல், உலகவியல் சுழலுள் உழன்றுகொண்டிருப்பவர்களுக்கு, இப்புஸ்தகம் ஒரு வரப் பிரசாதம்; நல்ல வழிகாட்டி.